திருவள்ளுவர் ஆண்டு 2047 மார்கழி – பங்குனி
ஜனவரி – மார்ச் 2017

ரூ. 8.00




# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



மலைக்கோட்டையில் வாழ்ந்து
மக்களின் மனக்கோட்டையில் நிறைந்த
மாமனிதர்
கொடை வள்ளல் "தமிழவேள்"

# VKN

அவர்களுக்கு "மக்கள் சிந்தனை" யின்
அஞ்சலி

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2048 மாதம் : மார்கழி-பங்குனி

மலர் : 30, 31 இதழ் : 12 & 1-3



## இனி ஒரு விதி செய்வோம்!

“யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழி போல் இனிதாவது எங்கும் காணோம்” என்றான் பாரதி.

“கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்தகுடி தமிழ்க்குடி”

எழுத்துக்கும் சொல்லுக்கும் இலக்கணம் பேசாமல், வாழ்க்கைக்கு இலக்கணம் பேசிய மொழி அருமைத் தமிழ் மொழி! அகம், புறம் என்று வாழ்வின் பண்பாட்டுக் கூறுகளைப் பகுத்துப் பார்க்கும் தனித்தன்மை தமிழுக்கே உண்டு.

1952 ஆம் ஆண்டு கிழக்குப் பாகிஸ்தானில் உருது மொழிக்குப் பதிலாக வங்க மொழியை அங்கீகரிக்க வேண்டும் என்று பெரும்பான்மையான மக்கள் கோரிக்கை விடுத்தனர். 1952 ஆம் ஆண்டு பிப்ரவரி 21 ஆம் நாள் பாகிஸ்தான் அரசின் ஊரடங்கு உத்தரவையும் மீறி டாகா பல்கலைக் கழக மாணவர்கள் நடத்திய போரட்டத்தில் நான்கு மாணவர்கள் காவல்துறையினரால் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். பலியான மாணவர்களின் நினைவாக ஒவ்வோர் ஆண்டும் பிப்ரவரி 21 ஆம் நாள் “உலகத் தாய்மொழி தினமா”கக் கொண்டாட வேண்டும் என யுனெஸ்கோ அமைப்பு 1999 ஆம் ஆண்டு அறிவித்தது.

“தமிழுக்கும் அமுதென்று பேர் அந்தத்
தமிழின்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்”

என்றான் புரட்சிக் கவிஞன் பாரதிதாசன்.

கர்சன் பிரபு வைஸ்ராயாக இருந்த காலத்தில், "கல்லூரிப் பாடத்திட்டத்தில் தாய்மொழிக் கல்வியை ஒரு பாடமாக வைக்கலாமா?" என கேள்வி எழுந்த பொழுது, கல்லூரிகளில் தாய்மொழியைப் பாடமாக வைக்கலாமா? என முடிவு செய்யும் பொறுப்பை சென்னைப் பல்கலைக் கழகத்திடம் கர்சன் பிரபு ஒப்படைத்தார்.

சென்னைப் பல்கலைக் கழகம் தாய்மொழியைப் பாடமாக வைக்க முடிவு செய்யும் பொறுப்பைப் பல்கலைக்கழக ஆசிரியர் சங்கத்திடம் ஒப்படைத்தது. அப்போது மு.சி. பூரணலிங்கம் பிள்ளை, பரிதிமாற் கலைஞர் என்ற சூரிய நாராயண சாஸ்திரிகள் பல்கலைக் கழக ஆசிரியர் சங்கத்தினை அணுகி, "தமிழ்நாட்டுக் கல்லூரிகளில் தாய்மொழியாகிய தமிழைப் பாட மொழியாக்க வேண்டும், தமிழுக்குச் செம்மொழி என்ற சிறப்பும், தனித்தன்மையும் உண்டு. எனவே, கல்லூரிகளில் தமிழை ஒரு பாடமொழியாக அங்கீகரிக்க வேண்டும்" என்று கோரிக்கை விடுத்தனர்.

அதைப் பல்கலைக் கழக ஆசிரியர் சங்கம் ஏற்றுக் கொண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தின் வாயிலாகக் கல்லூரிகளில் தாய்மொழியை குறிப்பாகத் தமிழ்மொழியைப் பாடமொழியாக வைக்கலாம்" என்று தீர்மானம் நிறைவேற்றியது. இதை வைஸ்ராய் கர்சன் பிரபு ஏற்றுக் கொண்டு, "கல்லூரிகளில் தமிழை ஒரு பாடமொழி"யாக அறிவித்தார்.

தமிழுக்குத் தனித்தன்மை அதன் செம்மொழிப் பண்புதான்! மொழியியல் அறிஞர்களின் கூற்றுகள் :

1. தொன்மை, தனித்தன்மை
2. பொதுமைப் பண்பு
3. நடுவு நிலைமை
4. தாய்மைத் தன்மை
5. பண்பாடு, கலை, பட்டறிவு வெளிப்பாடு
6. பிறமொழித் தாக்கங்களில்லாத் தனித்தன்மை
7. இலக்கிய வளம்

91/1

8. உயர் சிந்தனை
9. கலை இலக்கியத் தனித் தன்மை
10. வெளிப்பாடான பங்களிப்பு
11. மொழிக் கோட்பாடு

என்று 11 பண்புகளைத் தன்னகத்தே கொண்டிருக்கும் தனித்தன்மைக்குரிய மொழி செம்மொழி ஆகும்.

மொழியியல் அறிஞர்களின் கூற்றுப்படி, உயர் தனிச் செம்மொழியாகத் தமிழ் விளங்கிக் கொண்டிருக்கிறது.

"தென் ஆப்பிரிக்க விடுதலைப் போராட்டத்தில் இறுதி வரை தீரத்தோடு போராடியவர்கள் தமிழர்கள் தான்! அதனால் தான் அண்ணல் காந்தியடிகள் "தமிழர்களைப் பார்க்கின்ற பொழுது, என் உடன் பிறந்த சகோதரர்கள் என்ற உணர்வு ஏற்படும். தமிழர்கள் மீது கொண்ட பாசம் காரணமாக தமிழர்களின் தாய்மொழியாகிய தமிழைக் கற்றுக் கொள்ள ஆசைப்பட்டேன். திருக்குறளைக் கற்றுக் கொள்ள ஆசைப்பட்டேன். என் பணிச்சுமைகள் காரணமாக அவற்றைக் கற்க இயலாமல் போயிற்று" என்று வருத்தத்துடன் குறிப்பிடுகிறார்.

திருவல்லிக்கேணிக் கடற்கரையில் காந்தியடிகள் ஆங்கிலத்தில் உரையாற்றியது பற்றி, கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்த பாரதி, காந்தியடிகளுக்கு கடிதம் அனுப்பினார்.

"திருவல்லிக்கேணியில் தாங்கள் ஆற்றிய உரை ஆங்கிலத்தில் அமைந்து விட்டது ஏன்? என்று ஆதங்கப்பட்டு, "உங்கள் தாய்மொழியான குஜராத்தி மொழி அல்லது ஹிந்தி மொழியில் உரை ஆற்றியிருக்கலாம்" என்று கடிந்து எழுதி இருந்தார்.

"ஆம்! நான் ஆங்கிலத்தில் உரையாற்றியது தவறு தான். திருத்திக் கொள்கிறேன்! நீங்கள் ஏன் இந்தக் கடிதத்தைத் தமிழில் எழுதாமல் ஆங்கிலத்தில் எழுதி இருக்கிறீர்கள்? " என்று காந்தியடிகள் கேட்டார்.

"நாங்கள் யாரையும் மனம் புண்படுத்தும் விதத்தில் பேசுவதாக எழுதுவதாக இருந்தால், எங்கள் தாய்மொழி தமிழைப் பயன்படுத்த மாட்டோம்" என்று பாரதி கூறினார்.

இன்று எங்கள் தமிழ்மொழி எங்கு இருக்கின்றது?

ஆன்மீக வழிபாட்டுக் கூடங்களில், ஆலயங்களில் தமிழ் இல்லை! அறிவுத் தளத்தில் தமிழ் இல்லை!

"குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்"

என்றார் திருவள்ளுவர். இன்று எம்மக்கள் குழலினும், யாழினும் இனிய தமிழ்மொழியை மறந்து விட்டனர். அண்மையில் ஒரு தனியார் நிறுவனம் எளிதாக வாசிக்கும் வகையில் 8 வரிகள் கொண்ட பத்தியை வடிவமைத்து தமிழகத்தில் உள்ள 28 மாவட்டங்களில் உள்ள பள்ளி மாணவர்களிடம் வாசிக்கக் கொடுத்தது. இந்த ஆய்வில் முதல் வகுப்பில் படிக்கும் 43.4 சதவீதம் குழந்தைகளால் மட்டுமே, தமிழ் எழுத்துக்களை அடையாளம் காண முடிகிறது. 2ம் வகுப்பு படிக்கும், 43.6 சதவீத குழந்தைகளால் மட்டுமே வார்த்தைகளை வாசிக்க முடிந்தது, 5 ஆம் வகுப்பு படிக்கும் 29.9 சதவீத குழந்தைகள் மட்டுமே, 2 ஆம் வகுப்பு கதைகளை வாசிக்க முடிகிறது என்ற அதிர்ச்சியான தகவல். "சொல்லக், கொதிக்குதடா நெஞ்சம் வெறும் சோற்றுக்கோ வந்தது இந்தப் பஞ்சம்!" என்ற கொடுமை! தமிழகத்தில் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட செல்வங்கள் தமிழில் பிழையின்றிப் பேசவும், எழுதவும் தெரியாத தலைமுறை உருவாகிக் கொண்டிருக்கின்றது.

"தாய்மொழியைப் போற்றி வீழ்ந்த நாடும் இல்லை!

தாய்மொழியைப் புறக்கணித்து வாழ்ந்த நாடும் இல்லை! தன் தாய்மொழியில் கல்வி கற்று இன்று உலகச் செல்வந்த நாடுகளில் முதல் பத்து இடத்தைப் பிடித்த நாடுகள் :

1. அமெரிக்கா - இங்கிலீஷ் (English)
2. ஜப்பான் - ஜாப்பனீஷ்

3. ஜெர்மனி — ஜெர்மன்
4. சைனா — மான்டரீன்
5. கத்தார் - அரபி
6. நார்வே — நார்வேஜியேன்
7. தென் கொரியா — கொரியன்
8. லெக்சம்பெர்க் - லெக்சம்பெரீஷ்
9. ஐக்கிய அரபு எமிரேட் - அரபிக்
10. குவய்த் - அரபிக்

தன் தாய்மொழியை விட்டுப் பிறமொழி கற்ற நாடுகள், முதல் பத்து ஏழை நர்டுகளில் உள்ளன.

1. காங்கோ
2. லிபிரியா
3. ஜிம்பாப்வே
4. புரண்டி
5. எரித்திரியா
6. மத்திய ஆப்பிரிக்க குடியரசு
7. நய்ஜிரியா
8. மால்வி
9. டொகொ
10. மடகாஸ்கர்

தாய்மொழியை முதன்மையாகக் கொண்ட நாடுகள்

* இங்கிலாந்து — 126
* அமெரிக்கா — 447
* சைனா — 201
* ஜெர்மனி 201
* ரீயா — 276

கண்டுபிடிப்புகளும் கண்டுபிடித்துள்ளன. இந்தியா — 57க்குக் குறைவாகவே கண்டுபிடித்துள்ளது. அதுவும் அதில் அதிகம் நம் நாட்டில் ஆங்கிலம் வருவதற்கு முன்பே கண்டுபிடிக்கப் பட்டவை ஆகும்.

காலத்துக்கேற்ப ஒரு மொழி தன்னைப் புதுப்பித்துக் கொண்டே இருக்க வேண்டும். காலத்திற்கு ஏற்பத் தன்னைப் புதுப்பித்துக் கொள்ளாத மொழி கால வெள்ளத்தின் வேகத்தில் காணாமல் போய் விடும்: வழக்கு ஒழிந்து போகும் நிலை ஏற்படும். உலக நாகரிகத்தின் தொன்மையான, பழமையான மொழிகள் கிரேக்கம், லத்தீன், சமஸ்கிருதம், ஹீப்ரு, சீனம், தமிழ். ஆகியன.

தமிழும், சீனமும் மட்டும் நவீன அறிவியல் யுகத்துக்கு ஈடு கொடுத்து வளர்ந்த மொழிகள். கிரேக்கம், லத்தீன், சமஸ்கிருதம் ஆகிய மூன்று செம்மொழிகள் வழக்கத்தில் இல்லை. ஹீப்ரு மொழியை மீண்டும் வழக்கத்துக்குக் கொண்டுவர யூதர்கள் பெரும் முயற்சி செய்து வருகிறார்கள். இவற்றில் தமிழ் மொழி மட்டுமே மனித சிந்தனைகளையும் நுண்ணிய ஆற்றலையும் கொண்ட மொழி என்று மொழியியல் தந்தை எமினோ கூறியிருக்கிறார்.

"தாய்மொழி கண் போன்றது. பிற மொழி கண்ணாடி போன்றது" கண்ணாடிகளுக்காக கண்களை இழக்காமல் வாழ்ந்து காட்டுவோம்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்" என்ற பாரதியின் வாக்கும்,

"உலகியலின் அடங்கலுக்கும் துறை தோறும் நூற்கள்
ஒருத்தர் தயை இல்லாமல் ஊரறியும் தமிழில்
சல சலென எவ்விடத்தும் பாய்ச்சிவிட வேண்டும்" என்ற பாரதிதாசன் வாக்கும் வாழ்வாக வேண்டும். தேசத்திற்குத் தேசம் பொருள், வர்த்தகம், ஏற்றுமதி, இறக்குமதி மட்டுமல்ல முக்கியம். கொடுப்பதும், வாங்குவதும் அறிவாக, அறிவு சார்ந்ததாக அமைய வேண்டும். இனி ஒரு விதி செய்வோம். அதை எந்த நாளும் காப்போம்!

நம் மழலைச் செல்வங்கள் எல்லா மொழிகளையும் கற்கட்டும். கற்க வேண்டும். அவர்கள் கற்கும் கல்வியும், அறிவியலும் தாய்மொழி வழியே அமைய வேண்டும்! தாய்மொழி வழிக் கல்வி கற்பதே அவசர, அவசியம் என்ற நிலையை உணர்வோம்! உருவாக்குவோம்.

# “மலைக்கோட்டையில் வாழ்ந்து” மக்களின் மனக்கோட்டையில் நிறைந்த மாமனிதன்!

அன்பு – ஆற்றல் - வள்ளல் தன்மை இவற்றின் அடையாளம்!

வலது கை வழங்குவதை இடது கை அறியாத ஈகையின் திரு உள்ளம்!

வானத்தைப் போல நீலம்!

கடலை விட ஆழம்!

காற்றைப் போலச் சுதந்திரம்!

இவை எல்லாம் அவரின் உயரிய பண்புகளின் அடையாளம்.

தொழில் அகம் - அன்பு அகமாகிய அவரின் இல்லம்!

தமிழகம் முழுவதும் வானளாவ விரிந்து நிற்கும் விருந்தினர் தங்கும் இனிய இல்லங்கள்! அனைத்தும் நீல வண்ணம்தான். VKN என்பதன் விரிவு வள்ளியப்பன் கண்ணப்பன். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பொறியியல் பட்டம் பெற்ற சாமானிய இளைஞனாய், கால்களால் நடந்தும், மிதிவண்டிகளில் பயணித்தும் பல தொழிலகங்களில் ஏறி இறங்கிய பொழுது சொந்தத் தொழில் தொடங்க விதை மூலதனம் வழங்கிய நட்பின் அடையாளம்தான் வள்ளியப்பன்.

வள்ளியப்பன், பெற்ற உறவு அல்ல!

உடன் பிறந்த உறவும் அல்ல!

சொந்த உறவும் அல்ல!

அன்பால் வந்த உறவு!

நட்பிற்கும் நன்றிக்கும் அடையாளமாகத்தான் தம் பெயருக்கு முன்னால் வள்ளியப்பன் என்ற பெயரை இணைத்து “வள்ளியப்பன் கண்ணப்பன்” என்பதைத்தான் “VKN” என்று தம்மை அழைத்துக் கொண்டார்.

சாமானியராய், சாதாரண மனிதராய் திருச்சி வீதியில் சைக்கிளில் பயணித்தவர், வான் ஊர்திப் பள்ளியைத் தொடங்கிய

உயரத்தை அடைந்த சாதனையை எந்த எழுத்துக்களில் எழுதிக் காட்ட முடியும்.

"உழைப்பு! உழைப்பு! உழைப்பு"

அது தான் VKN அவர்களின் உயிர் மூச்சு!

"பாரி பாரி என்று பல ஏத்தி

ஒருவற் புகழ்வர் செந்நாப்புலவர்

பாரி ஒருவனும் அல்லன்

மாரியும் உண்டு

ஈண்டு உலகு புரப்பதுவே!"

முல்லைக்குத் தேர் கொடுத்த பாரியின் கொடைக்கு ஈடாக வற்றாது வளம் தந்து உலகை வாழ வைக்கும் மழையின் கொடையும் உண்டு என்று கபிலர் பாடுவார். பாரியைப் போல் வாரி வழங்கிய வள்ளல் தன்மை தான் VKN அவர்களின் கொடை உள்ளம்.

"என்ன கொடுப்பார்? எவ்வை கொடுப்பார்? என்று வந்தவர்கள் எண்ணும் முன்பே உதவி கேட்டு வந்தவர்கள் நினைத்ததை விட அள்ளிக் கொடுக்கும் உள்ளம் தான் VKN அவர்களின் கருணை உள்ளம்.!

தமிழகத்தின் திருக்கோயில்களில், பள்ளிகளில், கிராமங்களில் தாகம் தீர்க்கும் தண்ணீர்க் குழாய்கள் அமைத்துத் தந்து அரசு செய்யும் பணியைத் தனி மனிதராய் இலவச ஆழ்குழாய்க் கிணறுகள் அமைத்துத் தந்து, வறட்சிக் காலங்களில் பொது மக்களுக்கும், பள்ளி மாணவர்களுக்கும் இலவசக் குடிநீர் வழங்கினார்.

சமயபுரம் திருக்கோயிலின் அறங்காவலராய் ஆற்றிய அறப் பணிகள் கணக்கில் அடங்கா!

அருள்நெறித் தந்தை குருமகாசன்னிதானம் தவத்திரு குன்றக்குடி அடிகள் பெருமான் அவர்களுக்கு 1996 இல் அருளாலயம் எழுப்ப கால்கோள் இட்ட பொழுது உடனடியாக முதலில் ஒரு இலட்சம் நன்கொடை வழங்கினார். இன்றும் குன்றக்குடியில் தைப்பூசம், பங்குனி உத்திரப் பெருவிழாக்களில் பக்தர்கள் குடிநீர் தேவைக்கும், சாலையில் கும்பிடுதண்டம் போடுவோருக்கு வசதியாகத்

தண்ணீர் தெளிப்பதற்கும் பயன்படுத்துவது அவர் அன்பாக வழங்கிய 10,000 லிட்டர் தண்ணீர் கொள்கலன் (Water Tanker) தான்.

குன்றக்குடி சண்முகநாதப் பெருமான் திருவீதி உலாவுக்கும் நமது ஐந்து திருக்கோயில்களில் சுவாமி புறப்பாட்டிற்கும் பயன்படும் வகையில் அமைத்துள்ள பெரிய மூன்று டயர் வண்டிகள் அவர் அளித்தவை ஆகும்.

VKN ஆற்றிய கல்விப் பணிகள் சிறப்புக்குரியவை. தந்தை பெரியார் பல்கலைக் கழகத்தின் இணை வேந்தராக பணியாற்றினார்!

நமது பொதிகையடி பாபநாசம் திருவள்ளுவர் கல்லூரியில் ஆட்சிக்குழு உறுப்பினராக விளங்கினார். அத்தருணத்தில் கல்லூரிக்கு சுமார் ஏழு லட்சம் செலவில் ஒரு வகுப்பறையை நன்கொடையாகக் கட்டிக் கொடுத்தார்.

தமிழகம் முழுவதும் தங்குமனைகள் VKN அவர்களின் விசால உள்ளத்தைப் போல் விரிந்து வளர்ந்து நிற்கின்றன.

குற்றாலம், கன்னியாகுமரி, திருச்செந்தூர், மதுரை, இராமேஸ்வரம், காரைக்குடி என, தமிழகம் முழுவதும் இலவச தங்கும் விடுதிகள் உள்ளன. குறிப்பாக காரைக்குடியில் புத்தகக் கண்காட்சி நடைபெறுவதால் காரைக்குடி விருந்தினர் விடுதி முழுவதுமாக புத்தகக் கண்காட்சி தொடக்க நாள் முதல் நிறைவு பெறும் நாள் வரை புத்தகப் பதிப்பாளர்கள், விற்பனையாளர்கள் தங்க இலவசமாக வழங்கி வருகின்றார். காரைக்குடியில் புத்தக விற்பனையாளர்களுக்குத் தங்கும் வசதி இலவசமாகக் கிடைக்க வில்லை எனில் புத்தகக் கண்காட்சி வெற்றி பெறுவது மிகக் கடினம். அதன் முழுக்கொடை VKN அவர்களையே சாரும்! காரைக்குடி புத்தகக் கண்காட்சியின் ஈடு இணை இல்லாப் புரவலராக விளங்கி அறிவுத் திருவிழாவின் அச்சாணியாக விளங்கினார்!

தம் நிறுவனத்தில் பணியாற்றும் தொழிலாளர்களைத் தம் உறவுகளாகவே எண்ணிப் பார்த்தவர். தம் நிறுவனத்தின் வெற்றிக்குத் தம் தொழிலாளர்கள் தான் காரணம் என்று அவர்களுக்கு அள்ளிக் கொடுத்தார்.

இன்று எங்கே அந்த அள்ளிக் கொடுத்த வள்ளல் உள்ளம்?

பாரியை இழந்த பறம்புமலை போல், வள்ளல் VKN இல்லாத நிலையில் அவரோடு பழகிய நட்புகளுக்கும், தொழிலாளர்களுக்கும் வெறுமையே மிஞ்சுகின்றது.

நம் ஆதீனக் குருபூசை விழாவில் தமிழ் அறிஞர்களின் உணர்வுகளை ஊக்குவித்த தகைசால் சான்றோராகிய VKN அவர்களுக்கு 1997 இல் "தமிழவேள்" என்ற விருது வழங்கிச் சிறப்பித்தோம். அறம் காக்கவே பிறந்த VKN அவர்கள் சமயபுரம் திருக்கோயில் அறங்காவலராய்ப் பணியாற்ற வழிவகைச் செய்தோம்.

எப்போது VKN அன்போடு அழைத்தாலும் தட்டாமல் அவர் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வோம். குறிப்பாக விநாயகர் சதுர்த்தி, பொங்கல் திருநாள் ஆகிய இருநாட்களிலும் கண்டரமாணிக்கம் விநாயகர் கோயில் வழிபாட்டுப் பூசைகளில் கலந்து கொள்ளும் பொழுது நிறைய எளிய மக்களுக்கு அவர் உதவிகளை வழங்கும் விழாவில் நம் மூலமாக உதவிகளை வழங்கச் செய்வார்.

அன்புக்குரிய கொடைவள்ளல், தமிழவேள் VKN அவர்கள் பெற்ற அருமைச் செல்வங்களே! அன்புத் தம்பிமார்களே! உங்களுக்கு ஓர் அன்பு வேண்டுகோள்.

தந்தை VKN உருவாக்கிய நிறுவனங்களை, தொழில்களை கட்டிக் காத்திடுங்கள். அவர் வளர்த்த அறப்பணிகளை மேன்மேலும் வளரச் செய்யுங்கள்!

"மகன் தந்தைக்கு ஆற்றும்உதவி இவன்தந்தை
என்னோற்றான் கொல்எனும் சொல்"

என்ற உரைக்கு இலக்கணமாய் விளங்க வேண்டும்.

மலைக்கோட்டையில் (திருச்சியில்) கம்பீரமாய் வாழ்ந்த அந்த மாமனிதர் இன்று மக்களின் மனக்கோட்டையில் வாழ்கின்றார். ஓடி உழைத்த மகன் உறங்கட்டும் அமைதியாக! கொடைவள்ளல் தமிழவேள் VKN அவர்கள் ஆன்மா இறைவனின் திருவடி நிழலில் இன்ப அமைதி பெறட்டும்!

வாழ்க VKN புகழ்!
வளர்க அவர்தம் அறப்பணிகள்!

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

## (தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## குறிக்கோள் சார்ந்த வாழ்வு

தஞ்சை மாவட்டத்தில் மண்ணியாற்றங்கரையில் திருச்சேய்ஞலூர் என்ற ஒரு சிற்றூர் உள்ளது. இயற்கை வளங்கொழிக்கும் ஊர் அது. ஆகம சாத்திரங்கள் பயின்ற அந்தணர்கள் - நித்திய வேள்வி இயற்றும் சீலமுடைய அந்தணர்கள் பலர் வாழ்ந்த ஊர். திருச்சேய்ஞலூர்க் கிராமத்தில் வேள்வி குண்டப் புகை அணைந்ததே இல்லை.

இந்த ஊரில் எச்சதத்தர் - பவித்திரை என்ற தம்பதியருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. பிள்ளையின் திருநாமம். விசாரசருமர். அவர் இளமையிலேயே வேதங்களில் ஆறங்கங்களில், சைவாகமங்களில் வியக்கத்தக்க அறிவு பெற்றிருந்தார். விசாரசருமருக்கு முறைப்படி முப்புரி நூல் அணிவித்தல், வேதங்களில் பயிற்சி தொடங்குதல் முதலிய சடங்குகள் நடைபெற்றன. விசாரசருமர் வாழ்க்கையின் இயல்பையும் குறிக்கோளையும் உணர்ந்தார். சிவத்தைப் பூசிக்க வேண்டும் என்று தெளிந்தார், அறிந்து கொண்டார்.

ஒருநாள் மண்ணியாாற்றங்கரையில் தன்னையொத்த பிள்ளைகளுடனும் பசுக் கூட்டத்தினுடனும் சென்றபொழுது ஒரு பசு தன்னை மேய்ப்பானை முட்டப் போயிற்று. மேய்ப்பான் தற்காப்பு அடிப்படையில் அந்தப் பசுவைக் கண்டபடி அடித்துவிட்டான். இது கண்ட விசாரசருமர் மிகுந்த வேதனையுற்று மேய்ப்பானிடமிருந்து அடிபட்ட பசுவை மீட்டார். "பசுவை அடிக்கலாமா? நாளும் பால் சொரிந்து உயிர்க் குலத்தையும் பூசை முறைகளையும் வளர்க்கும் பசுவல்லவா? "பசுவின் உடம்பே புண்ணியத்தின் புதையல்" என்றெல்லாம் அறிவுரை கூறினார். அதுமட்டுமின்றி, "இனி நீ பசுக்களை மேய்க்க வேண்டாம், நானே மேய்த்துக் கொள்கிறேன்" என்று கூறி அந்த அந்தணச் சிறுவர் பசு மேய்க்கும் பொறுப்பினை ஏற்றுக் கொண்டார். செய்யும் தொழிலுக்குச் சாதிகள் தடையில்லை என்பது பழைய மரபு.

அன்று முதல் பசுக்களை மேய்க்கும் பொறுப்பை விசாரசருமர் சிறந்த முறையில் செய்தார். பசுக்கள் மகிழ்ச்சியாக இருந்தன. நிறைய

பாலும் கொடுத்தன. விசாரசருமர் பசுக்களை மிக நன்றாக வளர்த்தமையால் பசுக்களை தாம் ஈன்ற கன்றுகளைப் பிரிய நேரிட்ட பொழுதும் வருந்தவில்லை; ஆனால் விசாரசருமரை நினைத்தாலே பால் பொழியும் அளவுக்குப் பசுக்களின் நிலை வந்துவிட்டது. தாமே பசுக்கள் பொழியும் பாலைச் சிவபெருமானுக்கு முழுக்காட்ட விசாரசருமர் எண்ணினார். ஆதலால் மண்ணியாற்றின் மணலில் ஒரு சிவலிங்கத் திருமேனியை எழுந்தருளச் செய்து அந்த மூர்த்திக்கு, பசுக்கள் தாமே பொழிந்த பாலைத் திருமுழுக்காட்டினார். இது நாள்தோறும் நடைபெறும் பழக்கமாயிற்று. இங்ஙனம் பால் சுரந்தமையால் வீட்டிலும் பசுக்கள் தந்த பால் குறையவில்லை. இருப்பினும் ஊர் சும்மா இருக்குமா? ஒருவன் விசாரசருமர் சிவத்தினை எழுந்தருளச் செய்து பால் முழுக்காட்டுவதைப் பசுக்களுக்குரிய அந்தணர்களிடம் கூறிவிட்டான். அந்தணர்களுக்கு யாதொரு இழப்பும் இல்லை. அவர்களுக்குக் கறந்த பாலில், யாதொரு குறைவும் இல்லை. அப்படியிருந்தும் சபையில் விசாரசருமரின் தந்தையை அழைத்து, விசாரசருமரின் அடாத செயல் பற்றிக் கூறினர். விசாரசருமரின் தந்தை எச்சதத்தர் தவறு நிகழ்ந்திருக்காது என்றும் அப்படி நிகழ்ந்திருந்தால் அதற்குத் தாமே பொறுப்பேற்பதாகவும் உறுதி கூறினார்.

மறுநாள் விசாரசருமர் வழக்கம்போல் பூசையில் அமர்ந்தார்; பூசை செய்தார். தம்முன் எழுந்தருளியிருந்த இறைவனுக்குப் பால் முழுக்காட்டினாார். இச்செயலை ஒளிந்திருந்து பார்த்துக்கொண்டிருந்தார் எச்சதத்தர். விசாரசருமரின் தந்தை வெகுண்டு தடித்த கோலினால் விசாரசருமரை அடித்தார். விசாரசருமரின் சிவயோகம் கலையவில்லை. எச்சதத்தர் தீராத வெகுளியால் பால் முழுக்காட்டுக்கு என்று வைத்திருந்த பாற்குடத்தைத் தனது காலால் இடறி விடுகிறார். விசாரசருமரின் சிவயோகம் கலைகிறது. சிவ பூசைக்கு உற்ற இடர்ப்பாட்டைச் சடுதியில் உணர்கிறார். பாற்குடத்தை உதைத்த கால்களை வெட்டி விடுகிறார். எச்சதத்தர் கால்களை இழந்து வீழ்ந்தார். சிவபெருமான் அம்மையப்பராக எழுந்தருளிக் காட்சி தந்தருளி தாம் உண்பனவும் உடுப்பனவும் பெறும் சண்டேசுவரர் என்னும் பதந்தந்தருளினார்.

இந்த வரலாறு தரும் படிப்பினைகள் பலப்பல. முரண்பாடுகளும் உடைய வரலாறு இது.

பசுக்கள் பாதுகாக்கப்பட வேண்டியவை என்ற பாடம் மிக மிக முக்கியம். பசு இந்த நாட்டின் செல்வம். பசுக்களை முறையாக வளர்க்க வேண்டும். பசும்புல் மேயவிடுதல், நறுநீர் குடிக்கத் தருதல், குளிர் நிழலில்

படுத்து இழைப்பாறச் செய்தல் ஆகியன பசுப் பாதுகாப்புக்கு முக்கியம். இத்தகைய ஏற்பாடுகள் இன்று நமது நாட்டில் இல்லை. நாம் பசுக்களை வணங்கக் கற்றுக் கொண்டிருக்கிறோமே தவிர, வளர்க்கக் கற்றுக்கொள்ளவில்லை. குடம் குடமாகப் பால் கறக்கும் இந்தியப் பசுக்கள் இன்று உழக்குகள் அளவிலேயே கறக்கின்றன. பசுக்களில் அயல் நாட்டின் மோகத்தால் உள்நாட்டினம் அருகிப் போய்க் கொண்டிருக்கிறது. பசுக்களில் நமது மரபு வழி வந்த இனப் பசுக்களையே முறையாக வளர்க்க வேண்டும். எனவே, கிராமம் தோறும் முறையாக அமைந்த மேய்ச்சல் தரைகள் தேவை.

மனிதக் கூட்டம், தமக்கு இழப்பில்லையானாலும் மற்றவர்கள் ஒன்றை அனுபவிக்கவிட மாட்டாது. அதனாலேயே அடிமைத் தனத்தின் துர்க்குணமாகிய பொறாமை மனித குலத்தைவிட்டு அகலவில்லை. இன்று உலகம் முழுதும் வாழும் மக்கள் உண்டு மகிழப் போதிய உணவு உண்டு. ஆனாலும் பஞ்சம் இருக்கிறது. தனி மனிதனின் பேராசையே பஞ்சத்திற்குக் காரணம். விசாரசருமர் இறைவனுக்குப் பால் முழுக்காட்டியதில் பசுக்களின் சொந்தக்காரர்களுக்கு யாதோர் இழப்பும் இல்லை. அவர்களுக்குக் கிடைத்த பாலில் குறைவும் ஏற்படவில்லை. ஆயினும் விசாரசருமரின் வழிபாட்டிற்கு இடையூறு செய்கின்றனர். இதுதான் மனிதனின் விபரீத புத்தி.

சண்டேசுவரர் சிவயோகத்தில் அமர்ந்தருளிப் பூசை செய்கிறார். தந்தை எச்சதத்தர், தன் மகன் விசாரசருமரை அடிக்கிறார். ஆயினும் விசாரசருமரின் சிவயோகம் கலையவில்லை; பூசை நிற்கவில்லை. தன்னை மறந்து தலைவன்தாள் நினைந்த நிலை. தற்சார்பு முழுதும் அற்ற நிலை. ஆதலால், தந்தை அடித்த அடிகள் யாதொரு பயனையும் தரவில்லை. தந்தை எச்சதத்தர் பாற்குடத்தை இடறிய நிலையில் விசாரசருமருக்கு விழிப்பு வந்துவிட்டது. குறிக்கோளாகிய சிவத்திற்குத் திருமுழுக்காட்டல் என்ற குறிக்கோளுக்கு இடையூறு செய்தவரின் கால்கள் வெட்டி வீழ்த்தப்படுகின்றன.

தற்சார்பற்றுக் குறிக்கோள் சார்ந்து வாழ்ந்த நிலை, விசாரசருமரின் நிலை. இன்று நமது மக்கள் கூட்டத்திற்குக் குறிக்கோள் இல்லை. ஒரோவழி இருந்தாலும் குறிக்கோளுக்காகப் போராடுவதில்லை; வாழ்வதில்லை. எங்கும் தற்சார்பு வாழ்க்கை நிலையே மேலோங்கி நிற்கிறது. இது நமது மரபு இகந்து வாழும் முறையாம். குறிக்கோள் இலாது வாழும் வாழ்க்கை, கெட்ட வாழ்க்கை.

குறிக்கோள் அவரவர் நிலையில் அவரவர் தகுதி, விருப்பங்களுக்கேற்ப எடுத்துக்கொள்ளப்படுகிறது ஆதலால், குறிக்கோள் என்பது ஓர் ஒழுங்கமைவுடன் அமையாது; அமையமுடியாது; அமையக்கூடாது. தான் கருதும் குறிக்கோள்களின் காரணமாக ஒருவன் செய்யும் அறமல்லாத செயல்கள் அறமாகக் கருதப்பெறும். இஃது உலக வழக்கில் சிறப்புடையது. ஒரு நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கச் செய்யப்படும் கொலைகள், கொலைகளாகக் கருதப்படுவதில்லை. இது வரலாறு புகழும் வீரம்; தியாகம்! அதுபோலத் தான் வழிவழியாக நடைபெற்று வரும் மாந்தரினத்தின் குறிக்கோளாகிய வழிபாட்டிற்கு இடையூறு செய்தது குற்றம். குற்றத்திற்குத் தண்டனை கால்களை இழத்தல், அன்பின் மிகுதியால் பிறர் நன்மையுற – பலர் நன்மையடையச் செய்யப்பெறும் காரியங்கள் காட்சியளவில் கொடுமை போலவும் பாபம் போலவும் தோன்றினாலும் அவை கொடுமையும் அல்ல, பாபமும் அல்ல. காரணம் அன்பு; குறிக்கோள் வெற்றிபெறுதல். அங்ஙனமின்றி – அன்பு இல்லாமல் வரலாற்றுக்கும் மாந்தர் கூட்டத்துக்கும் பயன் இல்லாமல் செய்யப்படும் சில பணிகள் அறம்போலத் தோன்றினாலும் அவை அறம் அல்ல; குறியெதிர்ப்பு உடையன.

இந்த விசாரசருமர் பற்றி – சண்டேசுவரர் பற்றி மாணிக்கவாசகர் பாடிய திருப்பாடல் சிந்தனைக்குரியது.

மாணிக்கவாசகர் "தீதில்லை மாணி" என்று தொடங்குகின்றார். ஆம்! விசாரசருமர் இளம் வயதினர். அவருக்குத் தீய பயிற்சி இல்லை! தீய பழக்கங்களும் இல்லை! தூய்மையான வாழ்க்கையுடன் வளரும் இளைஞர் விசாரசருமர். தந்தையின் தாளைத் தடிந்த கொலைகாரர் என்ற எண்ணம் வந்துவிடக்கூடாதே என்ற முற்காப்புணர்வுடன் "தீதில்லை மாணி" என்றார். "தீதில்லை" என்று மட்டும் பொருள் கொண்டால் தன் தந்தையின் – எச்சதத்தரின் காலை விசாரசருமர் தடிந்தது குற்றமும் இல்லை; தீமையும் இல்லை என்பதாகும். ஏன்? வழிவழி வளர்ந்து வந்துள்ள மரபுகளைக் காக்கும் கடமை பூண்ட ஒருவர் அந்த மரபுகளையே அழிப்பதை எங்ஙனம் ஏற்க முடியும்? மரபுகளை அழித்தவர்கள் – அழித்துக் கொண்டிருப்பவர்கள் வாழ்ந்தால் என்ன? இறந்தால் என்ன? அடுத்தடுத்து வரும் தலைமுறைகளுக்கு உள்ள கடமை, வரலாற்றைத் தூக்கிப் பிடிப்பதுதான். அதைச் செய்யாதவர்கள் இருப்பது எற்றுக்கு? என்று உணரவைக்கிறார் மாணிக்கவாசகர்.

எச்சதத்தர், விசாரசருமருக்கு என்ன தீங்கு செய்திருந்தாலும் மன்னிக்கப்பட்டிருப்பார். ஆனால் எச்சதத்தர் செய்ததோ திருமுழுக்குக்கு வைத்திருந்த பாற்குடத்தை இடறிவிட்டதாகும். எனவே, செழுந்தமிழ் வழக்குக்கும் தமது குறிக்கோள்களுக்கும் இடையூறு விளைவித்தமையால் தாதை தாள் தடியப்பட்டது. எந்த உறுப்பு தவறு செய்ததோ அந்த உறுப்புக்குத்தான் தண்டனை தரப்பட்டது. ஆயிரம்தான் சொன்னாலும் எச்சதத்தர் தந்தை. எச்சதத்தரும் வழிபடும் திருமேனிக்கு இடையூறு செய்யவில்லை. இடறிவிட்டது பாற்குடத்தையே! இந்தக் குற்றத்திற்குக் காலையே வாங்குவதா? இது பாதகம் இல்லையா? என்று உலகவர் பேசுவதும் உண்மைதானே! உலகவர் பாதகம் என்று நினைந்து கூறினாலும் சோறும் பெற்றார். உடல் வளர, வாழச் சோறு தேவை. "சோறு" என்ற சொல்லுக்குப் பயன் அல்லது வீடுபேறு என்றும் விளக்கம் கூறலாம். இளையான்குடிமாறர் வரலாற்றில் "சோறிட்டுச் சோறு பெற்றார்" என்பார் சேக்கிழார் பெருமான். இங்கு விசாரசருமர், சண்டேசுவரர் எனும் பதம் பெற்றார் என்பதனை உணர்த்த "பாதகமே சோறு பற்றினவா" என்றார் மாணிக்கவாசகர்.

திருசேய்ஞலூர் விசாரசருமர் குறிக்கோள் பேணினார். சண்டேசுவரர் எனும் பதம் பெற்றார்.

இன்று குறிக்கோள் சார்ந்த வாழ்வு மலர்தல் தேவை. இன்றைய உலகம் அவாவி நிற்பது குறிக்கோளுடைய மக்களையே! குறிக்கோளுக்காகப் போராடும் மக்களையேயாம்.

*தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்*
*சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்*
*சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர் தொழப்*
*பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்*

(திருத்தோணாக்கம்-7)

## ஆதார் என் அடையாளம், மட்டுமல்ல, அதுக்கும் மேலே

ஆதார் அடையாளத்தை அரசு ஆவணமாக மட்டும் பார்க்கவில்லை. அதற்கு மேலே குடிமகனின் அடையாளமாக கொண்டுவரத் தொடங்கியுள்ளது. ஒவ்வொரு மனிதனுக்குமான அதிகாரம் என்று வரையறுக்கப்பட்ட ஆதாரை அனைத்துக்கும் தேவை என்று வெளிப்படையாக அறிவிப்பது நல்லது. இதுவரையில் ஆதார் எண் இல்லாதவர்கள் விரைவில் ஆதார் முறைக்கு மாறவேண்டியதும் காலத்தின் கட்டாயமாக உள்ளது. ஆதார் எடுக்கவேண்டிய நெருக்கடியில் உள்ளோம் என்பதை இந்த நேரத்தில் மக்களும் உணர்ந்துகொள்ள வேண்டும்.

# வான்மழையே! வாராயோ!

(தவத்திரு பொன்னம்பல அடிகளார்)

*"இலமென் றசைஇ இருப்பாரைக் காணின்*
*நிலமென்னும் நல்லாள் நகும்"*

என்றார் திருவள்ளுவர். மண்ணை உழுது பொன் ஆக்காதவனைப் பார்த்து, "இல்லை" என்று கைகளைக் கட்டிக்கொண்டு வேடிக்கைப் பார்ப்பவனைப் பார்த்து, நிலம் என்னும் நல்லாள் சிரிக்கின்றாள்.

ஆனால், இன்று உழுபவன் வாழ்க்கை தான் அலங்கோலமாய்க் கிடக்கிறது. இன்று விவசாய வாழ்க்கைத் தோல்விக்கு எது காரணம்? யார் காரணம்? வானம் ஏன் பொய்த்துப் போனது? மழை ஏன் பெய்யவில்லை; வறட்சி ஏன் தலை விரித்து ஆடுகிறது? பூமிப் பந்து ஏன் கொதித்துக் கொண்டிருக்கிறது?

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நால்வகை நிலங்களும் திரிந்து பாலை நிலம் ஆகியது ஏன்?

கண்ணிரண்டும் விற்றுச் சித்திரம் வாங்கிய கதையைப்போல, காடுகளை அழித்து கான்கிரீட் காடுகளை உருவாக்கினோம்.

பசுமையை அழித்தோம். வனங்கள் நமது இயற்கை வளங்களாய் இருந்தன. எல்லா ஊர்களும் காடுகள்தான்; வனங்கள் தான்; வளம் நிறைந்த சோலைகள் தான்! சாலைகளை அமைக்கச் சோலைகளை இழந்தோம். வயல்களை, மரங்களை அழித்து நான்குவழி, ஆறுவழிச் சாலைகளை அமைத்தோம். வயல்களை அழித்து நகரங்களை உருவாக்கி பூமியை நரகமாக்கிவிட்டோம்.

**மரங்களுக்காக மாண்ட மகளிர்**

நெஞ்சைப் பிளக்கும் ஓர் உண்மை நிகழ்வு. வட இந்தியாவில் ஜோத்பூர் மாவட்டத்தில் கேஜர்லி என்ற இடத்தில் கி.பி. 1730ஆம் ஆண்டில் 363 பெண்கள் அம்ரிதாதேவி என்ற பெண்ணின் தலைமையில், பச்சைக் குத்தி இருந்த கேஜ்ரி மரங்களைக் காப்பாற்ற ஒன்றுகூடினர்.

அந்த நாட்டு அரசனின் உத்தரவின்படி, கேஜ்ரி மரங்களை வெட்ட வந்தவர்களை 363 பெண்களும் தடுத்தனர். அவர்களை எல்லாம் மீறி வெட்ட முற்படும்போது, மரங்களைக் கட்டிப்பிடித்து 363 பெண்களும் தங்களின் உயிரை விட்டனர். மனிதக் கோடாலிகள் இரக்கம் இல்லாமல்

363 உயிர்களையும் பறித்து மரங்களை வெட்டினர். அந்த நிகழ்வுதான்சிப்கோ இயக்கம் உருவாக அடித்தளம் ஆனது. பூமித் தாய்க்கு பச்சை ஆடை பூண தவறிவிட்டோம்.

**மரங்களின் பயன்**

கவிஞர் வைரமுத்து கூறுவார். "பிறந்தோம் தொட்டில் மரத்தின் உபயம்! நடந்தோம் நடைவண்டி மரத்தின் உபயம்! எழுதினோம் பென்சில் பலகை மரத்தின் உபயம்! மணந்தோம் மாலை சந்தனம் மரத்தின உபயம்! எரிந்தோம் எரிந்தோம் இடுகாட்டில் எரிந்தோம் எரியும் விறகுகள் மரத்தின் உபயம்! மரந்தான் மரந்தான் எல்லாம் மரந்தான்

மறந்தான் மறந்தான் மனிதன் மறந்தான்!"

தொட்டில் முதல் இடுகாடு வரை மரங்கள் மனித வாழ்வின் மேம்பாட்டுக்குப் பயன்படுகின்றன என்பதைத்தான் இக்கவிதை சுட்டிக் காட்டுகின்றது.

மரங்கள், மனித குலத்தின் வரங்கள் என்பதே மகத்தான உண்மையாகும். ஓசோன் ஓட்டை ஆபத்திலிருந்து பூமிப்பந்து காப்பாற்றப்படவும், புவி வெப்பத்தைக் குறைக்கவும் மரங்களை நடுவதின் மூலம் சாத்தியம் ஆகின்றது. மரங்கள் தான் மழை பெய்வதற்கான நீர் ஆதாரங்கள். ஏரி, குளம், கண்மாய் முதலிய நீர் ஆதாரங்களைப் பேணிப் பாதுக்க வேண்டும்.

**பொறியியல் சாதனை கல்லணை**

மானுடத்தின் மிகப்பெரிய பொறியியல் சாதனையாகக் கருதப்பட்ட கரிகாலன் கட்டிய கல்லணை. அறிவியல் தொழில்நுட்பம் வளராத காலத்தில், நம் நீர் சேமிப்பு ஆதாரங்களின் மீது கொண்டுள்ள தொலைநோக்குப் பார்வையின் அடையாளம் ஆகும். தம் சொந்தச் சொத்தை விற்று பென்னிகுவிக் கட்டிய முல்லைப் பெரியாறு அணை, கண்ணீராலும், செந்நீராலும் எழுப்பப்பட்ட நீர்த்தேக்கம் ஆகும். ரசாயன உரம் இல்லாத, பூச்சி மருந்து தெளிக்காத இயற்கை விவசாய முறைக்கு மாறவேண்டியது இன்றைய காலத்தின் தேவை ஆகும்.

*"தொடிப்புழுதி கஃசா உணக்கின் பிடித்தெருவும்*

*வேண்டாது சாலப் படும்"*

ஒரு பலம் எடையுள்ள புழுதி, கால்பலம் ஆகும்வரை உழுது காயப்போட்டால், ஒரு கைப்பிடி கூட எருப்போட வேண்டிய அவசியம் இல்லாமல் விளையும். உழுத நிலம் கட்டிகள் இல்லாமல் நன்கு புழுதியாகும் வண்ணம், உழுதல் நல்ல விளைச்சலுக்கு அவசியம்.

இயந்திரங்களை உழுவதற்குப் பயன்படுத்தாத காலத்தில் உழவின் நுட்பத்தை வலியுறுத்தினார் திருவள்ளுவர்.

**பயிர் பாதுகாப்பு**

"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினும் நன்றதன் காப்பு"
உழுதலே நன்று!
அதனினும் நன்று எருவிடுதல்!
அதனினும் நன்று களை எடுத்தல்!
அதனினும் நன்று நீர் விடுதல்!
அதனினும் நன்று பயிர்ப் பாதுகாப்பு!"

என வரிசை முறைப்படுத்துகின்றார். இன்றைய சொட்டு நீர்ப் பாசனம் நீர் விரையம் ஆகாமல் சிக்கனமாக்க கிடைத்த நவீன வரப்பிரசாதம் ஆகும். பாடுபட்டு விவசாயம் செய்த விவசாயியின் வாழ்வு எப்படி உள்ளது?

"உழவினார் கைம்மடங்கின் இல்லை விழைவதூஉம்
விட்டமென் பார்க்கும் நிலை"

உழவன் கைமடங்கி உழைக்கவில்லை என்றால், வாழ்க்கையை விட்ட துறவிகளுக்கும் வாழ்க்கை இல்லை என்று உழவின் அவசியத்தை திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

**உயிர்விடும் உழவன்**

இன்று என்ன நிலை? உழவன் கைகள் கட்டப்பட்டு இருக்கிறது. தன் உழைப்பால் உழுது உணவு உற்பத்தி செய்து பிறர் உயிர்களைக் காத்தவன் இன்று உயிர்விட்டுக் கொண்டிருக்கிறான். பயிர்களைக் காக்கும் களைக்கொல்லி மருந்துகள் இன்று உழவர்களின் உயிர்க்கொல்லி மருந்துகளாக மாறிவிட்டன. காடு விளைந்த பொழுதுகூட கையும், காலும் மிச்சமாய் இருந்தது. இன்றோ உழவனின் உயிர்கூட மிச்சம் இல்லை.

உற்பத்திப் பொருட்களுக்கு நியாய விலை கிடைக்கவில்லை! விவசாய உற்பத்திப் பொருட்களுக்கு நியாயவிலை கிடைக்கவேண்டும். நச்சுக் கலப்பில்லாத இயற்கை விவசாயம் எங்கும் செழிக்க வேண்டும்.

வான் மழையே! நீ அபயம் தரும் ஆண்டவனைப் போல், உன்னை எதிர்பார்த்து மண்டியிட்டு வரவேற்கின்றோம். மழை பெய்ய வேண்டும். கண்மாய்கள், ஏரிகள், குளங்கள் நிரம்பட்டும்! எங்கள் விவசாயிகளின் விழிகளில் ஆனந்தக் கண்ணீர் சொட்டட்டும்!

---

# அடையாளத்தை அழிக்கலாமா?

(குன்றக்குடி சிங்காரவடிவேல்)

வெற்றுக் கால்களால் நடந்தால் நோய்த் தொற்று உண்டாகிவிடும் என்பதால் வீட்டிற்குள் கூட காலணிகள் அணிந்து பூமியின் தொடர்பை அறுத்துக்கொண்டு வாழ்ந்து கொண்டிருக்கிறது சமூகம்.

அதே சமூகத்தில்தான் நான்கு முழ வேட்டியை மடித்துக் கட்டிக் கொண்டு, கலங்களாக இருக்கும் கண்மாயில் இடுப்பளவு தண்ணீரில் நின்றுகொண்டு தான் வளர்க்கும் மாடுகளை வைக்கோலால் தேய்த்துக் குளிப்பாட்டிவிட்டு, தானும் அந்தத் தண்ணீரில் குளித்துவிட்டு வருகிறான் விவசாயி. அவன் நோய்த் தொற்றுக்கு கவலைப்படவில்லை. தான் வளர்க்கும் மாடுகளையும் தன்னைப்போல் நேசிக்கின்றான் என்பது தான் உண்மை.

ஒரு விவசாயியின் குடும்பத்தில் உடன் பிறக்காத பிறப்புகள்தான் மாடுகள். குடும்பத்தில் ஒரு உயிராகத் தான் மாடுகள் நடத்தப்படுகின்றன. பத்து கிலோ மீட்டர் தூரம் கடந்து நீங்கள் பிரியமாக நேசிக்கும் ஒரு நாயையும், ஒரு மாட்டையும் அவிழ்த்துவிட்டு வாருங்கள். எந்தப் பிராணி வீடு வந்து சேர்கிறது என்று பாருங்கள். மாடுகள் உடனே வீட்டிற்கு வந்துவிடும்.

மாடுகள் துன்புறுத்தப்படுகிறது என்றால் அவிழ்த்துவிட்ட அடுத்த நிமிடம் அது புதிய போக்கிடம் தேடிப் போய்விடாதா?

எவ்வளவுதான் ரத்த சம்பந்தமான உறவுகள் இருந்தாலும் அவை தூரத்தில் இருந்தால் எந்த மனிதனுக்கும் தூரத்து உறவுதான். பக்கத்து வீட்டில் இருக்கும் மனிதன்தான் நெருக்கமான உறவு. அதைப் போலத்தான் விவசாய வாழ்க்கையில் ஒவ்வொரு நாளும் மாடுகளுடனேயே தன் வாழ்வைக் கழிக்கும் விவசாயிக்கு மாடுகளும் உறவுதான். அவற்றோடு கொஞ்சி விளையாடும் ஒரு விளையாட்டுதான் மஞ்சுவிரட்டு. இது ஒரு கிராமக் கோயில் திருவிழா.

தமிழ்நாட்டில் சிவகங்கை, இராமநாதபுரம், புதுக்கோட்டை, திருச்சி, ஆகிய மாவட்டங்களில் மஞ்சுவிரட்டு நிகழ்வைக் காணலாம். தைமாத அறுவடைக்குப்பின், மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி மாதம் வரை ஒவ்வொரு ஊரிலும் இந்த மஞ்சுவிரட்டு நடைபெறும்.

ஒவ்வொரு கிராமத்திலும் பெண் தெய்வங்களுக்கு கோயில் இருக்கும். இதை கிராம தேவதைகள் என்று சொல்வார்கள். இந்த தெய்வத்திற்கு ஆண்டிற்கு ஒருமுறை அந்தந்த கிராமத்தினர் பாரம்பரிய அடிப்படையில் பத்து நாட்கள் விழா எடுப்பார்கள். இந்த திருக்கோயில் விழாவாகிய கரக உற்சவம், முளைப்பாரி, புரவி எடுப்பு என்று அந்தந்தக் கிராமத்துக்குத் தகுந்தவாறு திருவிழாக்கள் அமையும்.

ஒன்பது நாட்கள் ஒட்டுமொத்த கிராமமும் விரதம் இருந்து ஒன்பதாம் நாள் பால்குடங்கள் எடுத்து வழிபடுவார்கள். நிறைவு நாளான பத்தாம் நாளன்று பிற்பகலில் இந்த மஞ்சுவிரட்டு விழாவினை கொண்டாடுவார்கள். ஒன்பதாம் நாளும், பத்தாம் நாளும் உறவுகளையெல்லாம் தங்கள் வீட்டிற்கு வரச்சொல்லி விருந்து கொடுத்து மகிழ்வார்கள். ஒன்பதாம் நாள் சைவ விருந்து, பத்தாம் நாள் அசைவ விருந்து.

ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் திருமணமாகிச் சென்ற பெண்கள் பிறந்த வீட்டில் வந்து கொண்டாடும் விழா. மதிய விருந்திற்குப் பிறகு இந்த மஞ்சுவிரட்டு நடைபெறும். பிற்பகல் இரண்டு மணியிலிருந்து நான்கு மணிவரை இரண்டு மணிநேரம் தான் நடைபெறும். இதற்கென்று அந்தக் கிராமத்தின் கண்மாய் பகுதியில் பெரிய பொட்டல் ஒன்று எதற்கும் பயன்படுத்தாமலேயே வைத்திருப்பார்கள்.

இரண்டு முழத் துண்டை (குற்றாலம் துண்டு) காளை மாட்டின் கழுத்தில் கட்டியிருப்பார்கள். காளை மாட்டுடன் அதன் போக்கிலேயே ஓடி, அந்த மாட்டை நிறுத்தி கழுத்தில் கட்டியிருக்கும் அந்தத் துண்டை அவிழ்த்து விட்டால் அவன்வீரன். அந்த வீரனுக்கு வேறொன்றும் பெரிய பரிசு கிடைக்கப்போவதில்லை.

இந்த வீரர்கள் கிரிக்கெட், கைப்பந்து, கால்பந்து ஓட்டப்பந்தயம் போன்ற விளையாட்டுக்களைப் போல பயிச்சி எடுத்துக்கொண்டு வந்து காளை மாட்டுடன் விளையாடமாட்டார்கள். காளை மாட்டைத் தொட்டு ஓடிக்கொண்டிருக்கும் வீரன் விவசாயக் குடும்பத்தில் பிறந்து

மாடுகளுடனேயே வாழ்ந்து மாடுகளின் வாழ்க்கைப் போக்கை அறிந்தவனாகவே இருப்பான். மாடுகளோடு பழகாத எவன் ஒருவனும் மஞ்சுவிரட்டில் கலந்துகொள்ள முடியாது.

மஞ்சி விரட்டு என்பதுதான் மஞ்சுவிரட்டு என்றாகியிருக்கிறது. சோற்றுக்கற்றாழை நாரில் வண்ணச்சாயம் பூசி காளை மாடுகளின் கழுத்தில் கட்டி விரட்டப்படும் பண்டைய விழா.

கிராமத்தின் பொதுவில் மஞ்சுவிரட்டில் கலந்து கொள்ளும் காளை மாடுகளை சதுர வடிவில் கட்டப்பட்டிருக்கும் காம்பவுண்ட சுவருக்குள் அடைத்து வைப்பார்கள். அதற்கு "தொழு" என்று பெயர்.

கிராமத்தின் மூத்த அங்கத்தினர்கள், தலைவர்கள் காளை மாடுகளுக்கு கழுத்தில் கட்டக்கூடிய துண்டுகளை மொத்தமாக எடுத்துக் கொண்டு கிராமக்கோயிலுக்குச் சென்று அம்மனின் திருவடிகளில் வைத்து வழிபாடு நடத்துவார்கள். இரண்டு முழ துண்டுதான். அதற்கான சடங்கு சம்பிரதாயங்கள் ஏராளம்.

மாடுகளுக்குக் கட்டப்படும் துண்டுகள் வாங்குவதற்குக் கூட கிராமத்திலிருந்து ஒரு குழு அமைத்துக்கெண்டு திருமணப்பட்டு எடுக்கச் செல்வார்களேஅதைப்போல செல்வார்கள்.

பிறகு அங்கிருந்து தாரை தப்பட்டைகள் முழங்க தொழுவுக்குச் சென்று ஒவ்வொரு மாட்டிற்கும் கிராமத் தலைவர் துண்டு வழங்க அதை மாடுகளுக்கு அணிவித்துவிடுவார்கள். வீரர்கள் அந்த மாடுகளை ஓடிச்சென்று பிடித்து துண்டை அவிழ்த்து வீரத்தை நிரூபிப்பார்கள். மாடுகள் விரைந்து ஓடி அந்த மைதானத்தின் எல்லையைக் கடந்து விட்டால் அந்த மாட்டைப் பின்தொடர்ந்து எந்த வீரனும் செல்லக்கூடாது என்பது விதி.

இன்றும் கிராமக் கோயில்களில் கோயிலுக்கென தனியாக காளை மாடு ஒன்று ஊர்ப்பொது பராமரிப்பில் வளர்க்கப்படுகிறது. இந்தக் கோயில் மாடு விளைந்து நிற்கும் வயலில் இறங்கி மேய்ந்தால் அடித்து விரட்டமாட்டார்கள். கோயில் மாடு வயலில் மேய்ந்தால் விளைச்சல் அமோகமாக இருக்கும் என்று நம்புவார்கள்.

மற்ற கிராமங்களில் நடக்கும் மஞ்சுவிரட்டிற்கு தங்கள் கோயில் காளைகளை கலந்து கொள்ளச் சொல்லி தேங்காய் பழத் தட்டோடு பாக்கு வைத்து மஞ்சுவிரட்டு நடத்தும் கிராமத்தார்கள் இன்றும் அழைப்பது உண்டு.

மஞ்சுவிரட்டில் இந்தக் கோயில் காளையை யாராவது வீரர்கள் பின்பற்றி ஓடினால் இது இந்த ஊர் கோயில் மாடு என்று யாராவது சொன்னால் அந்த மாட்டை யாரும் தொடமாட்டார்கள்.

மாட்டுப் பொங்கல் அன்று கோயில் வாசலில் கட்டியிருக்கும் கோயில் மாட்டிற்கு ஒவ்வெரு வீட்டிலிருந்தும் துண்டு அல்லது வேட்டிகளை கொண்டு வந்து கழுத்தில் கட்டி வழிபட்டுச் செல்வார்கள். அதற்கென்று ஒரு நேரம் வைத்து ஒலிபெருக்கியில் அறிவிப்பு செய்து கிராமமே கூடி நின்று வழிபடுவார்கள்.

கோயில் மாடு நோய்வாய்ப்பட்டு இறந்துபோனால் அந்தக் கிராமமே துக்கத்தில் ஆழ்ந்துவிடும். ஒரு அரச மரியாதையைப் போன்று மலர்களால் அலங்கரிக்கப்பட்ட வண்டியில் அந்த மாட்டின் உடலை வைத்து, கிராமம் முழுவதும் சுற்றிவந்து அடக்கம் செய்வார்கள்.

மஞ்சுவிரட்டில் மாடுகளை அவிழ்த்துவிட்டபின்பு மாட்டுக்குரியவர்கள் வீடு திரும்பிவிடுவார்கள். ஆனால் அந்த மாடு அன்றோ அல்லது மறுநாளோ வீடு திரும்பிவிடும். அவ்வாறு திரும்பி வரும் காளைகளை வீட்டிலுள்ள பெண்கள் ஆரத்தி எடுத்து வரவேற்பார்கள்.

மஞ்சுவிரட்டு என்பது திருக்கோயில் சார்ந்த விழா. இதை மற்ற மதத்தினர் எவரும் கொண்டாடுவதில்லை. இந்துக்கள் மட்டுமே மஞ்சுவிரட்டு நடத்துகிறார்கள். பிள்ளைகளோடு பண்டிகைகாலங்களில் கொண்டாடி மகிழும் குடும்பத்தினர் போலத்தான் ஆண்டிற்கொருமுறை தன்னுடைய விவசாயத் தோழனாக இருக்கும் மாடுகளோடு அன்பாக ஓடிப்பிடித்து விளையாடுகிறான் விவசாயி.

மஞ்சுவிரட்டு முடிந்தபின் அங்கு விற்கப்படும் கரும்புகளை வாங்கித் தோளில் வைத்துக்கொண்டும், வாழைப்பழங்களை நாரில் கட்டி தோளில் தொங்கப்போட்டுக்கொண்டும் வருபவர்களையும், மதுரையிலிருந்து வரும் மரிக்கொழுந்துகளை கட்டுக்கட்டாக வீட்டுக்கு வாங்கி வரும் நிகழ்வுகளையும், மாட்டைப் பிடித்ததன் அடையாளமாக கிடைத்து விட்ட துண்டை வலது கையின் மணிக்கட்டுப் பகுதியில் கட்டிக்கொண்டு வரும் இளைஞர்களையும் கடந்த சில ஆண்டுகளாக கிராமங்கள் காணமுடியாமல் தவித்துக்கொண்டிருக்கின்றன. இனம்புரியாத சோகத்தில் மூழ்கியுள்ளன.

இந்த மஞ்சுவிரட்டு விழா முழுக்க முழுக்க கல்வியறிவு குறைந்த விவசாய மக்களால் ஊர் மக்களுக்காக நடத்தப்படும் கிராம விழா. கல்வியறிவு பெற்றவர்கள் இந்த விழாவில் பெரும்பாலும் ஈடுபாடு

காட்டுவதில்லை. அதனாலேயே திருக்கோயில் சார்ந்த இந்த வரலாற்றை எடுத்துச்சொல்லி முறையான அங்கீகாரம் பெறமுடியாமல் "மாடுகள் துன்புறுத்தல்" என்ற ஒரே பார்வையில் இன்று இந்த விழா தடைபட்டுக் கிடக்கிறது.

மஞ்சுவிரட்டு என்பது கிராமங்களின் வயல்வெளியில் ஆண்டு முழுவதும் உழைத்துச் சலித்தவன் உற்சாகம் காணும் வழிபாட்டுத் திருவிழா. இந்த விழா தடைகள் தாண்டி வருமா?

விவசாயிகளின் வாழ்க்கையில் வானம் தான் பொழிய மறந்துவிட்டது. கொண்டாட்டங்கள்கூட மறுக்கப்படலாமா?

(குறிப்பு: இக்கட்டுரை இந்த இதழில் வெளிவருவதற்கு முன்பே மத்திய அரசின் உதவியால் தமிழ்நாடு அரசு சட்டமியற்றி மஞ்சுவிரட்டுக்கு ஏற்பட்ட தடையை நீக்கிவிட்டது பாராட்டுக்கும் மகிழ்ச்சிக்கும் உரியதாகும்)

---

"மக்கள் சிந்தனை"யில் வெளிவரும் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றில் அமைந்துள்ள கருத்துக்களுக்கு அவற்றை எழுதியவர்களே பொறுப்பாவர்.

– ஆசிரியர்

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

# சிலம்பில் தொல்காப்பியப் பதிவு – IV

(தமிழாகரர். தெ. முருகசாமி)

தொல்காப்பிய இலக்கண உணர்வுகளைச் சிலப்பதிகாரக் கதைப் போக்குடன் பொருத்தி நோக்கிவரும் தொடர்ச்சியில் யாம், எம் என்ற சொற்களும் நீ, நின் என்ற சொற்களும் கதை தழுவிய பாங்கிற்குப் பொருந்துவதை இக்கட்டுரையில் காண்போமாக!

கோவலன் கொலை செய்யப்பட்டதைக் கேட்ட கண்ணகி நீதி கேட்கப் பாண்டிய அரசன்முன் நிற்கும்போது,

*நீர்வார் கண்ணை எம்முன் வந்தோய்*
*யாரை யோநீ! மடக்கொடி யோய்!* (வழக்.48-49)

என்றான் மன்னன்.

ஆட்சிப் பீடத்தில் உள்ள அதிகாரத்தால் கண்ணகியான குடிமகள் ஒருத்தியைப் பார்த்து நீ என ஒருமையில் சுட்டியதோடு தன்னைப் பாண்டியன் எம் முன் எனப் பன்மையில் கூறிக் கொண்டான். என் எனக் கூற வேண்டியவன் ஆட்சிக் கட்டிலின் இடத்தாலும் தன் மனைவி பாண்டிமா தேவியுடன் அமர்ந்திருக்கும் சிறப்பாலும மனைவியை உள்ளடக்கியவாறே எம் முன் என்றான்.

கண்ணகி மன்னனுக்குப் பதில் கூறியபோது, தேரா மன்னா எனத் தொடங்கி,

*என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி*

நின்பால் கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி எனச் சொல்லி மேலும் பல அறிமுகத்தையும் கூறினாள்.

ஈண்டுக் கண்ணகி பாண்டியனை மன்னனாக நினைத்தாலும் கூறும் கூற்றில் அவனை மதிக்காத உணர்வைச் சொற்களால் காட்டிவிடுகிறாள். அவற்றுள் நின்பால் என்றது சிந்திக்கத்தக்கதாய் உள்ளது. பாண்டியன் அவளை நீ என்றதற்கேற்ற ஒருமையில் நின் என்றாள் போலும்! தன் கணவனைக் கள்வன் எனத் தவறாக எண்ணிக் கொலை புரிந்ததைப் பொறுத்துக் கொள்ள முடியாத மனவெறுப்பின் கொதிப்புச் சொல்தான் "நின்"

மாந்தனின் வாயிலிருந்து வெளிப்படும் மொழி, பல்வேறு மன உணர்வுகளோடு வெளிப்படும் என்பது மொழிக்கான பொதுமை. அந்த வகையில் உயர்வு, அதிகார, நிலை என்ற அரசியல் பான்மையில் பாண்டியனிடத்திலிருந்து வெளிப்பட்ட இயல்பு தெரிந்தாலும் குடிமகளாகிய கண்ணகி நும்பால் கொலைக்களப்பட்ட என மரியாதை கருதி கூறாமல் நின் என்றது அவளின் மனக்கொதிப்பைக் காட்டியது எனலாம். பலரறிய மன்னனைச் சிறுமைப்படுத்த ஒருமைச் சொல்லான ஆயுதத்தை வீசினாள் என்க!

ஈண்டு நீ - நின் ஆவதற்கு இலக்கணம் உண்டேயன்றி நும் ஆவதற்கும் இலக்கணம் இல்லாத காரணத்தின் பொருத்தத்தை உணரும்போதுதான் கண்ணகியின் கூற்றின்வழி இளங்கோவின் இலக்கண உத்தியை உணர முடிகிறது.

*நீஎன் ஒருபெயர் நெடுமுதல் குறுகும்*
*ஆவயின் னகரம் ஒற்றா கும்மே*

என்ற தொல்காப்பிய எழுத்ததிகார உருபியல்நூற்பாவின்படி (7) நீ என்ற ஓரெழுத்து ஒரு சொல் நி எனக்குறுகி ன் என்ற எழுத்துப் பேறுடன் நின் - ஆகும்.

பாண்டியன் நீ என்றதற்குக் கண்ணகியின் நின் என்பது இணையான ஒருமையாயினும் நீண்ட பாண்டியனின் ஆட்சி அதிகாரப் போக்கு குறுகப் போவதன் குறிப்பைக் கண்ணகிமூலம் உணர்த்தினார் அடிகள். மேலும் இந்த ஓர் இலக்கணக் குறிப்பால் வேறோர் உண்மையும் வெளிப்படுகிறது.

விதிப்படி நீ என்பது நி எனக்குறுகி நின்றாலும் அது (நி) தனித்து ஓரெழுத்து ஒருமொழியாய்ப் பொருள் தராது. அந்த எழுத்து, மொழித்தொடர்பின்படி "ன்" என்ற எழுத்துப்பேறுடன்தான் பொருள் தரும். அதாவது இல்லாத ஓர் எழுத்தான எழுத்துப்பேறு சேர்ந்து பொருள் புலப்பாட்டைக் காட்டியதுபோல, பாண்டியனின் தீர ஆராயாத குற்றம் அவனது ஆட்சிக் குறுக்கத்திற்குக் காரணமானாலும் பாண்டியன் குற்றம் புரியத் தோன்றாத் துணையாய், அதாவது இல்லாத எழுத்துப்பேறு தோன்றியதுபோலப் பொற்கொல்லனின் செயல்பாடு துணைபுரிந்த உண்மையைப் பொருத்திப் பார்க்குமாறு செய்தார் இளங்கோ எனலாம்.

அதனால்தான் கொன்றச் சிலம்பு கொணர்க என்று பாண்டியன் கொலை செய்யச் சொன்னதன்படிப் பொற்கொல்லன் கொலைக்குக்

காரணமானான் என்பதைத் தொடர்புபடுத்தி உணரச் செய்யவே இளங்கோ கண்ணகியின் கூற்றில் நின்பால் கொலைக்களப்பட்ட எனக் கொலை என்ற சொல்லைச் சேர்த்தே குறித்தார்.

இங்ஙனம் குறிப்பாக உணர்த்திய பாங்கு கதைப்போக்கின் இறுதியில், "பொன்செய் கொல்லன் தன்சொல் கேட்ட" தால் வந்தது எனப் பாண்டியனாலேயே பலரறிய வெளிப்படையாகவே காட்டினார் இளங்கோ!

ஆக, நீதிகேட்ட கண்ணகியின் வழக்குப்படிப் பாண்டியன் நிலைதடுமாறப் போவதை நீ, நின என்ற செற்களின் ஆட்சியால் புலப்படுத்தியது போலவே எம், யாம் எனப் பாண்டியன் கூறிய தன்மைப் பன்மைச் சொற்கள் என், யான் எனத் தன்மை ஒருமையாக இறக்கம் பெற்ற சூழலை இலக்கணவழி இளங்கோவால் உணரலாம்.

பாண்டிமாதேவியாம் மனைவியொடு வீற்றிருந்தபோது பாண்டியன், தன்னிடம் வழக்குரைத்த கண்ணகியிடம் "எம்முன் வந்தோய் யாரையோ!" என்றான். வழக்கின் விவாதத் தொடர்ச்சியில் கண்ணகி, "என்காற் சிலம்பு மணியுடை அரியே" என்றதும், பாண்டியன் "யாமுடைச் சிலம்பு முத்துடை அரியே" என்றான்.

ஈண்டுக் குறிப்பிடும் எம், யாம் இரண்டுமே பாண்டியனின் ஆட்சிப் பீடத்திற்கேற்றதாயும் பாண்டிமாதேவியோடிருந்ததாயும் உள்ள தன்மைப் பன்மைச் சொற்கள். இச்சொற்பொருள் பன்மை, நீரின் குமிழ்போல் தோன்றிய அளவிலேயே நிலைக்காமல் மறைந்துவிட்டன. அதாவது என், யான் என்ற ஒருமைகளாகிவிட்டன. இவ்விலக்கணச் சொற்களின் இயல்பானது பாண்டியனின் ஏற்ற இறக்கத்தை உணர உதவுகிறது.

இப்படியாக எம், யாம் என்றெல்லாம் தன்னைப் பன்மையாக உணர்த்திக் கொண்ட பாண்டியனுக்குக் கண்ணகியால் நீதி உணர்த்தப்பட்டதும்,

*யானோ அரசன்! யானே கள்வன்!*
*மன்பதை காக்கும் தென்புலங் காவல்*
*என்முதல் பிழைத்தது, கெடுகஎன் ஆயுள்*

எனக்கூறி உயிர்துறந்தான்.

எம், யாம் என முன்னர்க் கூறியவன் யான், என் எனக்கூறிக் கொள்வதில் அவனது நீதிக்குத் தலைவணங்கும் உயர்பண்பு விளங்குகிறது. உலகியல் முறையில் கூறினால் ஆடி அடங்கிய அவலம்

அரங்கேறியதாக உணர முடிகிறது. குறிப்பாகச் சொன்னால் மனித வாழ்வே இலக்கணத்திற்கு உட்பட்டது என்பதைப் பறை சாற்ற இக்காட்சியை இளங்கோ சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார் எனலாம்.

தாம்நாம் என்னும் மகர இறுதியும்
யாம்என் இறுதியும் அதனோ ரன்ன;
ஆ எ ஆகும் யாம்என் இறுதி
ஆவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்
ஏனை இரண்டும் நெடுமுதல் குறுகும்

என்ற தொல்காப்பிய எழுத்ததிகார உருபியல் நூற்பாவில் (16) சில கருத்துக்கள் கூறப்பட்டாலும் யாம் என்பது எம் ஆகும் என்பது தெரிகிறது. எவ்வாறெனில் யாம் என்ற சொல்லில் ம் மட்டும் நிற்க, யா என்பதில் உள்ள ஆ என்பது எ என்றாகி, யகரம் கெட்டுவிட எம் ஆகும் எனக்கூறிப்பட்டுள்ளது.

இதில் யாம் – எம் ஆவதற்குக் கூறிய இலக்கணம்போல் எம் – என் ஆவதற்கு இலக்கணம் கூறப்படவில்ல. எனினும் என் என்ற ஒருமையே எம் ஆகும் என்பதால் எம்முன்வந்தோய் யாரையோநீ என முன்னர்க் கூறினான் பாண்டியன். ஆனால் அவனே தான் நீதி தவறியதை ஒப்புக் கொள்ளும் வாக்கு மூலமாகவே,

*மன்பதை காக்கும் தென்புலங் காவல்*
*என்முதல் பிழைத்தது* (வழக்கு.76-77)

என்றான். எம் முதல் பிழைத்தது எனக்கூறாமல் என் என ஒருமையில் கூறிக்கொண்டதில் ஓர் உண்மை ஒளிந்துள்ளது.

கோவலனை ஆராயாமல் கொலை தண்டனைக்கு ஆளாக்கியது தான் மட்டுமே என்பதால் வழிவழியான பாண்டியர் குல அரசமாண்பிற்குத் தன்னால் குறைநேர்ந்துவிட்டதை எண்ணி தனக்குத் தானே நொந்து கொண்டதன் வெளிப்பாடுதான் பாண்டியன் என்முதல் பிழைத்தது என்றதாம்.

பாண்டியர் குலத்திற்குப் பாண்டிமாதேவியால் குறைநேரவில்லை என்ற உண்மையாலும் அவன் என்முதல் என்றது பொருந்தும்.

இந்த அடிப்படையில்தான் தன் மனைவியைக் குறிக்காத அளவிற்கு யானோ அரசன் யானே கள்வன் எனக் கூறிக்கொண்டான். இந்தக் குறிப்பின்படி தானே தண்டனைபெறும் பொருட்டு இறப்பைத் தேடிக் கொள்ள விரும்பியதால் கெடுக என் ஆயுள் எனக் கூறிக்கொண்டான்.

யாமுடைச் சிலம்பு என்று கண்ணகியிடம் கூறிய போது பாண்டியன் தன் மனைவியைச் சேர்த்தே கூறினான். ஆனால் நீதி உணர்ந்ததும் யான் எனத் தனிமைப்பட்டான். யாம் - பன்மையான் - ஒருமை.

இந்த யாம் என்ற பன்மை யான் என ஒருமையாகும் எனத் தொல்காப்பியர் இலக்கணமாக நூற்பா செய்யவில்லையாயினும் யான் என்பது, "யாம் என்ற சொல் எம் என ஆனதுபோல் ஆகும்" என்பதால் யான் ஒருமை, யாம் பன்மை எனத் தொல்காப்பியர் உணர்ந்ததை உணர முடிகிறது. இந்த உண்மையை இரண்டு இயல்களில் கூறும் யான் என்ற சொல்லுக்கான இலக்கணம் கூறும் வகையால் உணரலாம்.

*தான் யான் என்னும் ஆயீ ரிறுதியும்*
*மேல்முப் பெயரொடும் வேறுபா டிலவே*

என்பது உருபியல் நூற்பா (20).

தான்யான் எனும்பெயர் உருபியல் நிலையும் என்பது புள்ளி மயங்கியல் நூற்பா (57).

இவ்விரண்டு நூற்பாவின் கருத்து யாதெனில் தாம், நாம், யாம் என மகர ஈற்றுப்பெயர்கள் தம், நம், எம் என ஆதல் போதல் னகர ஈறான தான், யான் என்பன தன், என் ஆகும் என்பதாகும்.

இவ்விலக்கணத் தொடர்ச்சியால் யாம் பன்மை என்றும் யான் ஒருமை என்றும் நேருக்கு நேராகப் பன்மை ஒருமை உணர்தல் போலவே யாம் - எம் என்ற பன்மை ஆதல் போல் யான் - என் என்ற ஒருமை யாதலும் நேருக்கு நேரான கருத்து எனத் தெரிகிறது.

இந்த இலக்கணத் தொடர்ச்சியின் அடுக்கை அதாவது வரிசையைக் கதையோடு பொருத்தினால் யாமுடைச் சிலம்பு என்றவன் யானோ அரசன் எனக் கூறிக் கொண்டான் என்பது தெரிகிறது. அடுத்து யான், யான் என இருமுறை கூறியதற்கேற்பவே "யான் என் ஆகும்" என்றபடி "என்முதல் பிழைத்தது, கெடுக என் ஆயுள்" என இருமுறை "என், என்" எனக்கூறி உயிர் துறக்கிறான்.

அரசவையில் தானும் மனைவியுமாகத் திருவோலக்கப் பொலிவில் பன்மையாகக் காட்டிய மன்னன், தானளித்த தீர்ப்பால் தனக்குத் தானே "தண்டனையைத்தேடிக் கொள்வதே" உத்தமம் எனக் கருதி இதில் தன் மனைவிக்குப் பங்கில்லை என்பதை உணர்த்தவே தன்னைப் பிரித்துக் காட்டிக் கொள்ள ஒருமையைப் பயன்படுத்தினான் என்பதை இளங்கோவடிகள் இலக்கணவழி உணர்த்திக் காட்டிய மாண்பை என் சொல்வது?

---

# இறங்கி வழிந்தோடும் இரக்கம்

**மு. பழனிஇராகுலதாசன்**

அருட்பா ஆறு திருமுறைகளிலும் ஊடு சரடாய், உள்ளீடாய்ப் பொதுளிப் பொங்கித் ததும்புவது "உயிர்கள் மீதான பேரிரக்கம்" என்பதே ஆகும். "அப்பா, நான் வேண்டுதல் கேட்டு அருள்புரிய வேண்டும், ஆருயிர்கட்கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்" என்ற வேண்டுதல் மொழி, ஒரு விருத்தப்பாடலில் இடம்பெறுவதே என்றாலும், இவ்வேண்டுதல் மொழி ஆறு திருமுறைகளுக்கும் உரிய பொதுப்பண்பே ஆகும். "ஆருயிர்கட்கெல்லாம்" என்ற பொது விசாலத்தைச் சற்றுக் கூர்மை செய்து "யார்மீது?" என்று அரங்கிட்டுக் கொள்ளலாம். கொண்டால் இராமலிங்க சுவாமிகளின் திருவுள்ளப் பாங்கு நமக்கு மிகவும் எளிதில் புலப்படலாகும்.

மானுடம் தழுவிய இறை நெறியாளர்களுக்குச் சமுதாயத்தின் விளிம்பு நிலை மனிதர்கள் மீதுதான் இரக்கம் பேரிரக்கம் எல்லாம் நிகழும். இயேசு பெருமானும் தமது மலைப்பொழிவு என்னும் மாண்பொழிவில் தொடக்கமாக "எளிய மனிதர்", "துயர் உறுவோர்" என்றே பேசக் காணலாம். வள்ளலாரும் வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினார்; வீடுகள் தோறும் இரந்தும் பசி அறாது அயர்ந்த வெற்றரைக் கண்டு உளம் துடித்தார்; நீடிய பிணியால் வாடுகின்றோர் நேருக்கு நேர் வரக்கண்டு துடித்தார்; மானிகளாய், ஏழைகளாய் நெஞ்சு இளைத்துப் போன மனிதர்களைக் கண்டு இளைத்தார். ஏழை, எளிய, சாமானிய மக்களை நோக்கியே வள்ளலாரின் கவிதை வெள்ளம் இரக்க உணர்வோடு இறங்கியும் பிறங்கியும் வழிந்து வழிந்து ஓடியது; ஓடிக்கொண்டே இருந்தது; ஓரிடத்திலும் முற்றுப்புள்ளி இட்டுக் கொள்ளாமல் ஓடிக்கொண்டே இருந்தது; ஆறாக ஓடியது; ஆறு திருமுறையாக ஓடியது. பயில்வார் நெஞ்சங்களைக் கிள்ளியும் அள்ளியும் கொண்டவாறு ஓடிப் பிரவகிக்கும் எண்ணற்ற அருட்பாடல்களில் நெய்ச்சிறுகரண்டியின் நுனிமூக்குச் சொட்டுக்கள் போல, இங்கு இரண்டு பாடல்களை நெஞ்சிலேற்றிப் பார்க்கலாம்.

தொலைவில்; எந்த இடம் என்று தெரியவில்லை; தொடர்ந்து கூக்குரல் கேட்கிறது; இரவிலும் கேட்கிறது; பகலிலும் கேட்கிறது; யாருடைய குரல்? இப்படித் தவிப்பவர் யார்? கற்றார், கல்லார், அவர்தம் உற்றார், உறவினர் என்று விளிம்பு நிலை மனிதர்கள்தான் இப்படிப் பரிதாபக்குரல் எழுப்புகிறார்கள்; சந்தேகமே இல்லை: எளியாரை வலியார் அடிக்கின்றார்கள். அளியர்பால் கொடியர் பலர் கொடுமை செய்கின்றார்கள். என்னதான் நடக்கிறது? ஏன்தான் இப்படி நடக்கிறது? ஒன்றும் புரியவில்லை; மக்கள் புலம்பித் தவித்து இரவும் பகலும் கூக்குரல் இடுவது மட்டும் கேட்கிறது. அந்த ஏழை, எளிய மனிதர்களுக்கு, உறவினருக்கு இரவிலும் பகலிலும் தொடர்ந்து என்ன நடக்கிறது? ஏன் நடக்கிறது? ஒன்றும் புரியவில்லை; ஆனால் இரவிலும் பகலிலும் கூக்குரல் இட்டு ஆற்றாது அழுவது மட்டும் கேட்கிறது; கேட்டுக்கொண்டே இருக்கிறது.

வள்ளலார் ஏழை மனிதர்; எளியவர்; தனி மனிதர்; உலகத்தார் போல் அல்லாமல், ஒரே ஒரு நீளமான வெள்ளை ஆடையை தலைக்கும் காலுக்குமாகச் சுற்றி அணிந்து, நீறுபூசி வாழும் மனிதர். இரவிலும் பகலிலும் ஏழை எளிய விளிம்பு நிலைச் சனங்கள் ஆற்றாது அழுது புலம்பித் தவிப்பதைக் கேட்டு என்ன செய்ய முடியும்? "என் செய்கேன், என் செய்கேன், என் செய்கேனே" என்று பயந்து பயந்து வாழ்ந்தவர். "சந்தையே பகுந்த நாயினிற் கடையேன்; யாரினும் கடையேன்; யாரினும் சிறியேன்" என்று புலம்பித் தவித்தவர். எங்கே நடக்கிறது? என்ன நடக்கிறது? என்று கொடுமை நடக்கும் இடத்துக்கு, கூக்குரல் கேட்கும் இடத்துககு நேரடியாகப் போக இயலாத நிலையில், வள்ளலாரின் மெல்லிய உள்ளம் மட்டும் ஓடிப்பார்த்து ஓடிப்பார்த்துத் தவித்துப் போகிறது.

*"எளியரை வலியார் அடித்த போது*
*அய்யோ என்மனம் கலங்கிய கலக்கம்*
*தெளிய நான் உரைக்க வல்லவன் அல்லேன்;*
*திருவுளம் அறியுமே எந்தாய்!*
*களியரைக் கண்டு பயந்த என்பயம்தான்*
*கடலினும் பெரியது கண்டாய்!*
*அளியர்பால் கொடியர்செய்த வெங்கொடுமை*
*அறிந்த என்நடுக்கம் யார் அறிவார்!*
*"கற்றவர் கல்லார் பிறர்பிறர் குரல்என்*
*காதிலே கிடைத்த போதெல்லாம்*

*மற்று அவர்தமக்கு என்னுற்றதோ, அவர்தம்*
*மரபினர் உறவினர் தமக்குள்*
*உற்றது இங்கு எதுவோ என்று உளம் நடுங்கி,*
*ஓடிப்பார்த்து, ஓடிப்பார்த்து இரவும்*
*எற்றரும் பகலும் ஏங்கி நானடைந்த*
*ஏக்கமும் திருவுளம் அறியும்!"*

ஏழை மனிதர்கள் புலம்பி அழுது கூக்குரல் இடுவது இரவிலும் பகலிலும் கேட்கிறது. கலவரம் நடக்கும் கண்ணீர் பூமிக்கு வள்ளலார் போக முடியவில்லை ; அவருடைய பேருள்ளம், ஓடிச்சென்று ஓடிச்சென்று பார்த்துப் பார்த்து இரவும் பகலும் தவியாய்த் தவிக்கிறது; தளர்ந்து போகிறது; உலர்ந்து போகிறது; ஒருசொல் மீண்டும் மீண்டும் அடுக்கி வருவது குறித்துப் பேசும் தொல்காப்பியம் (894), "பொருளொடு புணர்தல்" என்ற காரணத்தையும் சுட்டிக் காட்டும். வள்ளலாரின் மெல்லிய உள்ளம் ஓடுகிறது, பார்க்கிறது; திரும்புகிறது; மறுபடியும் ஓடுகிறது, பார்க்கிறது; திரும்புகிறது.

"ஓடிப்பார்த்து, ஓடிப்பார்த்து" என்று வரும் அடுக்கிய சொற்கள் அடிகளின் நெஞ்சத்தவிப்பை ஓர் உருக்காட்சியாக நமக்குள் எழுப்பிவிடுகின்றன ; எழுப்பி நம் நெஞ்சத்தைக் கிள்ளி எடுத்து அள்ளிக் கொள்கின்றன.

மூத்த வழக்கறிஞர்

## வி.ஆர்.எஸ். மெய்யப்பனார் காலமானார்

புதுக்கோட்டை மூத்த வழக்கறிஞர் வி.ஆர்.எஸ்.மெய்யப்பனார் அவர்கள் 1.2.2017 அன்று காலமானதறிந்து "மக்கள் சிந்தனை" வருந்துகிறது. நமது குன்றக்குடி ஆதீனத்தின் சட்ட ஆலோசகராகவும் முதல்வட்ட அன்பராகவும் விளங்கிய பெருமகனார் அவர், அவர்தம் மறைவு பேரிழப்பாகும். அவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கும் அன்பர்களுக்கும் "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்வதோடு அப்பெருமகனாரின் நல்லுயிர் இறைவன் திருவடி நிழலில் இன்ப அமைதி பெறப் பிரார்த்திக்கிறது.

– ஆசிரியர்

# விழுவது எழுவதற்கே!

புலவர். கோ.பெ.நாராயணசாமி

தடுக்கி விழுவதில் பிழையில்லை
வெடுக்கென் றுடனே எழுந்துவிடின்,
இடக்கு என்பது ஒன்றில்லை
எழுந்து முயற்சி தொடங்கிடினே!

விழுந்த இடத்தில் மீண்டுமவன்
விழுகின்றானே கொடுமை இது -
அழுந்தச் சொன்னார் குன்றக்குடி
அடிகள் நமக்கு அறிவுரையாய்!

படிப்போம் படிப்போம் நன்மைகளை
பலமுறை படிப்போம் பழுதின்றி
எடுப்போம் முயற்சி வென்றிடவே
எளிதாய் வெல்வோம் சிறப்புகளை!

விழுதல் என்பது எழுவதற்கே
வெற்றி என்பது கிட்டிவிடும்
தொழுக! நல்ல முயற்சிகளை
தோல்விகள் இன்றி வாழ்ந்திடலாம்!

எதிரில் கேட்பார் மகிழ்ந்திடவே
இனிய சொற்களில் உரையாடு
கதிரில் மணிகள் இருப்பதுபோல்
கருத்து மணிகள் நிறைவோடு!

---

28-02-2017 சீமை கருவேல மரங்களை வளர்க்க தடைவிதிக்கும் சட்டத்தை இரண்டு மாதங்களில் நிறைவேற்றுமாறு தமிழக அரசுக்கு சென்னை உயர்நீதிமன்ற மதுரைக்கிளை 27.2.2017 அன்று உத்தரவிட்டது. சீமைக் கருவேல மரங்களை அகற்றும் பணிகளுக்குத் தேவையான நிதி ஒதுக்கீடு செய்து 15 நாட்களுக்குள் அகற்றவும் உத்தரவிட்டது.

# மணிமொழியன் என்றும் உள்ளார்!

(முனைவர்.புலவர். ம. இளங்கீரன், கோவை)

அடிகளார் அன்புச் செல்வர்;
        அறநெறி வளர்த்த செம்மல்!
வடிக்கிறோம் கண்ணீர் வெள்ளம்
        வந்துநீர் நீரா டீரோ?
கடிக்கிற நாய்போன் றார்க்கும்
        கருணையை ஊட்டி, முந்தி
முடிக்கிற பணிபா ராட்டும்
        முகமலர் தாம ரையீர்!

தேனிகர் செம்மொ ழிச்சீர்
        திருப்பணி செம்ம லே!இம்
மாநிலம் எல்லாம் தங்கள்
        மணிமொழி என்று கேட்போம்?
ஊனினை உருக்கும் பேச்சின்
        உள்ளொளி முகத்தில் காண்போம்?
மேனிலை சுழற்சங் கத்தின்
        வித்தகத் தலைவர் ஏறே!

பத்தெனும் மணித்து ளிக்குள்
        பன்னிரு குறள்மொ ழிந்தீர்!
அத்தனே! உம்சொல் லாற்றல்
        அமுதினிச் சுவைப்போ மாநாம்?
எத்தனாம் எமனுக் கென்ன
        இன்பமோ? உமை யழைத்தான்!
பித்தரே ஆனோம் ஐயா!
        பிரிவினைத் தாங்கொண் ணாதே!

நன்மணி மொழிதான் என்றும்
        நம்முடன் உள்ளார்! அன்புச்
சொன்மணி கூடும் யாவும்
        சுடர் விடும் குறளின் வீச்சே!

*பன்மணி ஆரம் கோத்துப்*
*படைத்தஉம் படைப்பெல் லாமே!*
*பொன்மணிக் கண்ணீர் சிந்திப்*
*பொழிந்திடும் இரங்கல் தொங்கல்!*

*இமையெனத் தமிழுக் காக*
*இந்தியை எதிர்த்த சிங்கம்*
*அமைதியின் வழியைக் காட்டி*
*அனைத்துல கிணைத்தார் எங்கே?*
*நமையின் றவல மாக்கி*
*நடையினைத் துறந்த வள்ளால்!*
*சுமையினைத் தாங்கு வார்யார்?*
*சுடர்மணி மொழியே! ஐயா!*

*குறள்முனி தமிழ்மா அண்ணல்*
*கூவியே அழைத்தா ரோ?நீர்*
*இறப்பிலாப் புகழைப் பெற்றீர்!*
*ஏந்தலே! உமது நட்பை*
*மறக்கிலோம்; நற்செ யல்கள்*
*மாநிலம் எல்லாம் போற்றும்!*
*அறஞ்சொலும் திருக்கு றள்போல்*
*அழிவிலாப் புகழே வாழி!*

மனிதன் நீர்வளங்களின் ஆதாரங்களை அழித்துத் தனக்குத் தானே தற்கொலை செய்து கொள்கிறான். நிலத்தைத் துண்டாடி அழிக்கின்றான். காற்றை மாசுபடுத்துகின்றான். தண்ணீரை மாசுபடுத்துகின்றான். காற்று, நீர், நிலம் அனைத்தையும் மாசுபடுத்தி, நச்சுப்படுத்தி இயற்கைக்கு நஞ்சூட்டித் தனக்குக் கல்லறை கட்டுகின்றான். வரங்கொடுத்த ஆண்டவன் தலையில் கைவைப்பது போல, தன்னைத் தாயாய்த் தாலாட்டும் இயற்கையை அழிக்கின்றான். இதனால் மழை பொய்த்து நீர்வளம் குன்றியது. நெல் விளைத்தவன் கடனைச் சுமக்கின்றான். பிள்ளைகளுக்குப் பெயர் சூட்டிய காலம் போய் புயல்களுக்கு விதம்விதமாய்ப் பெயர்சூட்டும் காலமாக மாறிவிட்டது.

*விண்ணில் நீர் பொய்த்து கண்ணீர் பொழிகின்றது.*
*அதுவும் சில நேரங்களில் வறண்டு விடுகின்றது.*

– அன்பே வாழ்வு (பக்.177)

# திருக்குறள் சொற்பொழிவு

நெல்லை மாவட்ட உலகத் திருக்குறள் பேரவை சார்பில் பாளையங்கோட்டை மாநிலத் தமிழ்ச் சங்கத்தில் 15ஆவது தொடர் சொற்பொழிவு பா. வளன் அரசு தலைமையில் நடைபெறுற்றது. பிரபா இறை வேண்டல் பாடினார். த.மு.சா. காசாமுகைதீன் முன்னிலை வகித்தார். முன்னாள் மாவட்டக் கல்வி அலுவலர் அ. இராஜகிளி "வள்ளுவர் கண்ட நாடு" என்ற பொருள்பற்றிச் சிறப்புரையாற்றினார். ராமன் வரவேற்றார். நிகழ்ச்சியில் கர்னல் ஜானகிராமன், பேராசிரியர் ந.உசாதேவி, பேராசிரியர் கி.சவுந்தரராசன் வானொலி நிலைய முன்னாள் உதவி இயக்குநர் க.குக. நமச்சிவாயம் முன்னாள் மாவட்டப் பதிவாளர்கள் ந. இராஜகோபால், பாஷ்யம் தொழிற்சங்கத் தலைவர் பி. ஆவுடையப்பன், பி. சுந்தரம், மா. சுப்பிரமணியம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

## தூத்துக்குடியில் உலக் திருக்குறள் பேரவை கிளையின் சார்பில் தமிழ்ப்புத்தாண்டு – பொங்கல் விழா – திருவள்ளுவர் நாள் கொண்டாடப்பட்டது

உலகத்திருக்குறள் பேரவை, தூத்துக்குடி கிளையின் சார்பில் தமிழ்ப்புத்தாண்டு, தமிழர்களின் திருநாளாம் பொங்கல் திருநாள், உலகப் பொதுமறையான திருக்குறளை இயற்றிய திருவள்ளுவரின் 2048–ஆம் ஆண்டு பிறந்தநாள் விழா கொண்டாடப்பட்டது.

தூத்துக்குடி மாநகரில் புதியபேருந்து நிலையம், நீதிமன்றம் முன்பு, விக்டோரியா மேனிலைப்பள்ளி, சிவன் கோவில் தெரு, வ.உ.சி. சந்தை ஆகிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ள திருவள்ளுவர் குறள் பலகைகள் புதுப்பிக்கப்பட்டு புதிய குறளும், ஒருவரி உரையும் எழுதப்பட்டு மாலை அணிவித்து விழா கொண்டாடப்பட்டது.

இப்பெருவிழாவில் உலகத் திருக்குறள் பேரவையின் மாவட்டச் செயலாளர் திருக்குறள் மோ.அன்பழகன், துணைத்தலைவர் பேராசிரியர். ச. சவகர்லால், மருத்துவர் இராசலிங்கம், சற்குரு சீனிவாச சித்தர், முருகேசன், கவிஞர் இளமுருகு, குருசாமி, சீனிவாசன் மற்றும் பேரவை உறுப்பினர்கள் கலந்துகொண்டனர்.

## சிறப்பாசிரியருக்கு கடிதம்....

செப்டம்பர் 2016 மக்கள் சிந்தனை மாத இதழில் அன்பே வாழ்வு என்ற தலைப்புக்கு முன்னுரை எழுதிமுன் உதாரணமாக விளங்கும் தங்களது பணி எவராலும் ஈடு செய்யமுடியாது.

"மக்கள் சிந்தனை" மனிதர்களின் சிந்தனை என்பதில் வியப்பில்லை, ஐயா அவர்களது எழுத்து என்றென்றும் மனதில் நிற்கும் அரிய பொக்கிஷம், ஆண்டவன் அருளால் அன்பே வாழ்வு போல் இன்னும் பல தலைப்புகளுக்கு முன்னுரை வழங்கி முறையாக இளம் தலைமுறையினர் பயிலக்கூடிய வண்ணம் வாய்ப்பு அளிக்க வேண்டுமென இருகரம்கூப்பி வணங்கி கேட்டுக்கொள்கின்றேன்.

– ச. சுப்ரமணியன், சென்னை–118

மார்கழித் திங்கள் முதல்நாள் தொட்டுத் தாங்கள் வானொலியில் திருவெம்பாவைப் பாடல்களுக்கு விளக்கம் தந்தருளும் ஒலிபரப்பைக் கேட்டு மகிழ்கின்றேன்.

தோத்திர சாத்திரங்கள், பல உலகியல் உண்மைகள், நீதி நூலாம் குறள்கள், இதிகாச உதாரணங்கள் போன்ற பலவும் குழைந்த தெய்வத்தீந்தமிழ் இனிப்பாகப் புலர் காலைப்பொழுதில் செவியின்பமாய்க் கேட்கும் வாய்ப்பைப் பெற்றேன் என்பதைப் பணிவுடன் தெரிவித்துக்கொள்கின்றேன்.

தமிழ்ப்புத்தாண்டான பொங்கல் நன்னாளில் வானொலி தன்னில் வழங்கியருளிய புத்தாண்டுப் பொங்கல் உரையைக் கேட்டு மகிழ்ந்தேன்.

1. இதயக்குப்பை, 2. காப்பகத்தகவல், 3. அப்பாவே சுமை
4. குழந்தை தத்தெடுப்பு 5. இயந்திரப் போக்கான துருபிடித்த வாழ்வு 6. மண்பானை – மண் தந்த கொடை 7. குழந்தை கிறுக்கலில் அப்பா உன்னை நேசிக்கிறேன் என்ற அமுதஎழுத்து 8. மனம் மாசுபடாத தாக்கும் இனிப்புப் பொங்கல் 9. வாழ்க்கை பொருளுடையதாக இருக்க வேண்டும். 10. உழவின் உயர்வு – என்றெல்லாம் அருளிய இன்னுரை, பொங்கல் இனிப்பாய் – புலர் காலைப்பொழுதில் இருந்தது.

குன்றக்குடி ஆதீனப்பொங்கல் சீர்பெற்றதான மகிழ்வில் மகாசந்நிதான ஆசி வேண்டும்.

– தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி.

"தங்களின் வான் மழையே வாராயோ" கட்டுரை இன்று தினமலர் நாளிதழில் படித்தேன். உலகிலேயே சிறந்தது அழகு - அழகு என்பது ஒருவர் செய்கின்ற செயல்தான். அது பொதுநலம், இயற்கை சார்ந்து இருந்தால் அழகு மிளிர்கிறது. சிறு துளிகளில் உருவாகும் ஊற்று மிகப்பெரிய நதியாக உருவாவது போல் ஒவ்வொரு தனிமனிதனின் முயற்சி இயற்கையை வளப்படுத்தும் வகையில் இருந்தால் நம் பூமி சோலை வனமாகும். அடிப்படைத் தேவை உணவு அதைத் தருவது இயற்கை

பஞ்ச பூதங்களால் உருவான மனிதன்
பஞ்ச பூதங்களால் உருவான பூமி
மனிதன் பூமியை துன்புறுத்தித்
தானும் அழிகிறான்.
பூமியை வளமாக்கி
நாமும் வளப்படுவோம்.
கட்டுரைக்கு பாராட்டுக்கள், நன்றி!

**- சே. மணிகண்டன்**, பெரியகுளம்

தினமலர் (18.1.17) இல் "வான் மழையே வாராயோ" என்னும் தலைப்பில் சன்னிதானம் அவர்கள் எழுதிய கட்டுரையைப் படித்தேன். அது ஆயிரக்கணக்கான தமிழர்களை ஈர்த்திருக்கின்றது. பழங்கவிதையும், புதுக்கவிதையும் கலந்து எழுதப்பட்டுள்ள கட்டுரை வாசகனை மெய்மறக்குமாறு செய்தது.

தங்கள் பிரார்த்தனைக்கு பலனுண்டு. மழை பெய்யும், ஊருணிகள், கண்மாய்கள் குளங்கள் நிரம்பும். விவசாயிகள் ஆனந்தமடைவார்களா. தமிழ்நாடு செழிக்கும்.

-பேராசிரியர். **நா. தர்மராஜன்**, சிவகங்கை

சமூகத்தின் "சமயவாழ்வு" நூல் படித்தேன். படித்து மகிழ்ந்தவற்றை, மகிழ்ச்சியைப் பகிர்ந்துகொள்ள எழுதியுள்ளேன்.

◆ விநாயகர் மாபாரதம் எழுதியதைக் குறிப்பிடும்போது, "தன் அழகைச் சிதைத்து அறிவைச் செதுக்கினார்" என்பதும் (பக்.33)

◆ நம் செய்களை நாமே பரிசோதனை செய்துகொள்ள வேண்டும் என்னும் போது "உடல்நலமுடன் இருக்க மருத்துவ பரிசோதனை செய்கிறோம்", "உள்ளத்தை அப்படிப் பரிசோதிக்கிறோமா" என்பதும் பக்.3.5)

◆ ஆன்மிகம் பற்றிக் குறிப்பிடும்போது, "அள்ளித்தருவதல்ல ஆன்மிகம், கிள்ளித்தருவதும் அல்ல, சொல்லித் தருவதுதான் ஆன்மிகம்" என்பதும் (பக்.41)

◆ அலெக்சாண்டர், டயோசனிஸ் உரையாடலில் "எனக்கு என் குருநாதருக்கு (நாய்க்கு)" என்று பற்றற்றநிலையை விளக்குவது. (பக்.44)

◆ பதப்படுத்துவது குளிர்சாதனப்பெட்டி. அதில்வைத்தகாய் கனியாக மாறுவதில்லை. காயினைக் கனியாக மாற்றுவது பக்குவப்படுத்துவது. மனிதனது மனமாகிய காயினைக் கனியாக மாற்றுவது பக்தி.(பக்.70)

◆ "உழைத்துப் பெற்ற ஒரு ரூபாய், சாலையில் கிடைத்த நூறு ரூபாயைவிடப் பலமடங்கு மதிப்புமிக்கது" என்பதைச் சொல்லிக் கொடுங்கள் (பக்.91)

◆ பஞ்சு, பச்சைக் களிமண், சர்க்கரைப் பொம்மைகள் கற்பிக்கும் பாடம் (பக்.91)

◆ டோங்கோவாலா பாப்பா – அன்புப் பரிமாற்றம் (பக்.98)

◆ "பயணத்திற்குத் தேவையானவற்றை மட்டும் எடுத்துப் பாதுகாப்பதுபோல, அன்றாட வாழ்வுக்கு எது தேவையோ அதை மட்டும் மனத்தில் பற்றிக் கொள்ள வேண்டும்" (பக்.11)

◆ அண்ணல் காந்தியடிகளின் தியாகம் பற்றி ஈன்ஸ்டின் "உயிரும் தசையும் உள்ள இம்மாதிரியான மனிதர் ஒருவர் உலகில் நடமாடினார் என்பதை வருங்காலத் தலைமுறை நம்ப மறுக்கும்" (பக்.126) என்ற செய்தி அந்நாளில் 9ஆம் வகுப்பு மாணவர்களிடம் அண்ணல் காந்தியடிகள் பற்றிய நிகழ்ச்சிகளைக் கூறியபோது முருகேசன் என்ற மாணவன் நம்பாமல் "அப்படியா அவர் இருந்தார்" என்று கேட்டதும், "அவரைக் கண்ணால் யானும் கண்டிருக்கிறேன் ஒருமுறை" என்று கூறியதும் நினைவுக்குவந்தன.

◆ "வாழ்க்கை என்பது புரிதலில்தான் இருக்கிறது" என்பதை கணவன் மனைவி இருவரும் ஒவ்வொருவரும் பிறர் வங்கிக் கணக்கில் தம் மகிழ்ச்சிக் காலங்களில் பணம் செலுத்தி வாழ்க்கை புரியவைக்கும். (பக்.131)

◆ உயர்திரு. இறையன்பு குறிப்பிட்ட "நைனேஷ்தவே"யின் வாழ்க்கை (பக்.138) சிவபரிபூரணமாக இருந்தருளும் வணக்கத்திற்குரிய 45ஆவது குருமகாசந்நிதானம், மற்றும் தங்கள் வாழ்க்கை நிகழ்வுகளை நினைவூட்டியது.

♦ "கற்றல் என்பது வகுப்பறைக்குள் மட்டும் அல்ல; வாழ்க்கை முழுதும் நிகழ்கிறது" (பக்.144)

♦ "உற்பத்திப் பொருள்களை ஏற்றுமதி செய்யவேண்டிய தேசத்தில் உற்பத்தியாளர்களை ஏற்றுமதி செய்து கொண்டிருக்கிறார்கள்". (பக்.170)

என்பனவும் பிறவும் படிப்பவர் உள்ளத்தில் விதைத்த தேர்ந்தெடுத்த வித்துக்கள். பயன்தரும் என்று நம்புகிறேன்.

– க. கதிரேசன், பெங்களூரு

## சிந்தனை வட்டம்....

"குழந்தைகளே இலக்கியம்; பிறகு அவர்களுக்கென்று தனியே இலக்கியம் தேவையா?" என்று சிந்தித்த தவத்திரு அடிகளார் அவர்கள், பிள்ளைகள் பற்றிக் கூறிய ஐந்து சிறுகதைகள், "ஐம்பெரும் காப்பியங்கள்" எனலாம். ஒவ்வொன்றும் நம் நெஞ்சில் கல்வெட்டுக்களாகப் பதிகின்றன.

திருக்குறள் செம்மல் மணிமொழியர், கோபி.கா. அரங்கசாமி, பேரறிஞர் வா.செ.குழந்தைசாமி ஆகிய மும்மணிகளின் மறைவு, எத்தகைய பேரிழப்பு என்பதனை உணர்வுபூர்வமாக, தமக்கே உரிய தனிப்பெரும் உரைநடைச் சிறப்பால், உள்ளம் உருக்கும் அவலச் சித்திரங்களாகப் படைத்துள்ள அடிகளாரின் அருள் உள்ளத்தை நினைந்து மெய்சிலிர்க்குமாறு முந்தைய நிகழ்வு ஒன்று நினைவுக்குள் வந்தது.

ரசிகமணி டி.கே.சி.யின் தவப்புதல்வன் இறந்தபோது, அவனைப் பற்றிக் கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை பாடிய இரங்கல் வெண்பாவைப் படித்த ரசிகமணி "இப்பேர்ப்பட்ட அருமையான இரங்கற்பா தமிழுக்குக் கிடைக்கும் என்றால், நான் இன்னொரு மகனையும் இழக்கத் தயாராக இருக்கிறேன்" என்றாராம்.

"திருக்குறள் பேரவையின் தூண்கள் தொடர்ந்து சரிந்தவண்ணம் உள்ளன" என்னும் அடிகளாரின் சொற்கள் நம் உள்ளத்தை உலுக்குகின்றன. எத்தனை தூண்கள் சரிந்தாலும், குன்றக்குடியில் வலுவான இளம் தூண் நிலையாக நின்றருள்கின்றது; அது, அடுத்த தலைமுறையிலிருந்து வலிய தூண்களை உருவாக்கிப் பேரவையை நிலைநிறுத்திக் கொள்ளும் என்னும் நம்பிக்கை, நமக்கெல்லாம் வலிமையாக இருக்கிறது...

– அய்க்கண், காரைக்குடி

காரைக்குடி தொழில் வணிகக் கழகத்தில் 50 ஆம் ஆண்டு பொன்விழாவில் தாங்கள் ஆற்றிய உரையின் தொகுப்பை நாளிதழில் படித்தேன். விவசாயம் நம் தமிழகத்தில் பின்னோக்கிச் செல்வதைக் கண்கூடாக அறியமுடிகிறது. எனது குடும்பம் தொடர்ந்து வேளாண்மை செய்து வந்த நிலையில் தற்சமயம் கடந்த மூன்று ஆண்டுகளாகச் செய்ய இயலாத நிலை, ஆழ்துளைக் கிணற்றில் நீர் இல்லை. நிலத்தடி நீர்மட்டம் பாதாளத்திற்குச் சென்று விட்டது ஒரு காரணம். கண்மாயில் தண்ணீர் வரத்து நின்று பல வருடங்கள் ஆகின்றது. நீதிமன்ற உத்தரவால் தற்போது சீமைக் கருவேலமரங்கள் நீக்கப்பட்டு வரப்படுகிறது. தொடர்ந்து வளராமல் தடுத்தால் இன்னும் மூன்று ஆண்டுகளில் நீர்மட்டம் உயரலாம். தொலைநோக்குச் சிந்தனையோடு வாழ்ந்தவர்களெல்லாம் தற்போது குறைந்து வருகிறார்கள். விவசாயம் செழிக்கவேண்டும் என்ற தங்களது சிந்தனை உயர்வான சிந்தனை. சிந்தனைகளைத் தொடர்ந்து விதையுங்கள். நல்ல விளைச்சல் எதிர்காலத்தில் உண்டு.

– பா. வாசுதேவன், திருப்புவனம்

*திங்களொடு செங்கதிரும்*
*வழங்கும் ஒளிவெள்ளம்*
*தங்கள் மனத்தில்*
*தனியாட்சி நடத்திவர*
*நாடெல்லாம் நல்ல*
*தமிழர் உயர்வார்கள்*
*நளெல்லாம் தங்கள்*
*வரவாலும் உறவாலும்*
*மன்றம் வளர்கிறது;*
*புதுவாழ்வு பெறுகிறது.*
*உயிர்மூச்சின் நன்றி;*
*உங்கள் நலம் பெருகட்டும்*

– ம. முத்தரசு, இராசபாளையம்

## குன்றக்குடியில்
## உலகத் திருக்குறள் பேரவை மாநில அளவிலான கட்டுரைப்போட்டி பரிசளிப்பு விழா : மாநிலச் செயற்குழு கூட்டம் :

குன்றக்குடியில் – ஆதீனத் திருமடத்தில் திருவள்ளுவராண்டு 2048 தைத்திங்கள் 23 (5-2-2017) ஞாயிற்றுக்கிழமை அன்று காலை 10-00 மணியளவில் உலகத் திருக்குறள் பேரவை மாநில அளவிலான கட்டுரைப் போட்டி பரிசளிப்பு விழா நடைபெற்றது. புலவர் திரு. நாவை.சிவம் இறைவாழ்த்துப் பாடினார். மாநிலப் பொதுச் செயலாளர் புலவர்.திரு.தி.சு.மலையப்பன் வரவேற்புரையாற்றினார். மாநில மகளிர் அணிச் செயலாளர் தமிழ்த்திரு.சந்திரா ரவீந்திரன் அறிக்கை படித்தார், உலகத் திருக்குறள் பேரவைத் தலைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் விழாவிற்குத் தலைமையேற்றுப் போட்டியில் வெற்றி பெற்ற கல்லூரி மாணவச் செல்வங்களுக்கு ரொக்கப்பரிசு, சான்றிதழ், புத்தகங்கள் வழங்கிச் சிறப்புரை ஆற்றினார். மாநிலப் பொருளாளர் திரு.சீனு சின்னப்பா, துணைத் தலைவர், திரு.சு. முருகானந்தம், மாநில மகளிர் அணிச் செயலாளர் முனைவர்.யாழ்.சு. சந்திரா ஆகியோர் முன்னிலை வகித்து வாழ்த்துரை வழங்கினர். இளைஞர் அணிச் செயலாளர் முனைவர்.சொ.சேதுபதி நிகழ்ச்சித் தொகுப்புரை வழங்கினார். இளைஞர் அணித் துணைச்செயலாளர் முனைவர்.மு.பழனியப்பன் நன்றியுரை ஆற்றினார். நாட்டுப்பண்ணுடன் விழா இனிதே நிறைவெய்தியது.

பிற்பகல் 2.30 மணியளவில் மாநிலச் செயற்குழுக்கூட்டம் நடைபெற்றது.

தமிழகத்தின் முன்னாள் முதல்வர்.மாண்புமிகு.புரட்சித்தலைவி செல்வி.ஜெ.ஜெயலலிதா அவர்கள், உலகத் திருக்குறள் பேரவையின் முதன்மைப் பொதுச்செயலாளர் திருக்குறள் செம்மல் ந. மணிமொழியன் அவர்கள், பேராசிரியர், முனைவர்.கா. அரங்கசாமி அவர்கள், அறிஞர் வா.செ.குழந்தைசாமி அவர்கள், தூத்துக்குடி மாவட்டத் துணைத்தலைவர், திரு.மலர்வேந்தன் அவர்கள் ஆகியோரின் மறைவுக்கு இக்கூட்டம் மௌன அஞ்சலி செய்தது.

செயற்குழுக்கூட்டத்தில் தமிழகத்தின் பல மாவட்டங்களிலிருந்தும் 35க்கும் மேற்பட்ட செயற்குழு உறுப்பினர்கள் கலந்து கொண்டு பேரவை வளர்ச்சிக்குப் பல ஆலோசனைகள் வழங்கினர்.

இக்கூட்டத்தில் தமிழர் பண்பாட்டின் ஆணிவேராகிய ஜல்லிக்கட்டு நடைபெற அவசரச்சட்டத்தை இயற்றி வழிவகுத்த மத்திய, மாநில அரசுகளுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டது. ஜல்லிக்கட்டு, மஞ்சுவிரட்டு ஆகிய தமிழ்ப் பண்பாட்டு அடையாளத்தைக் காக்க அறப்போராட்டத்தில் ஈடுபட்ட மாணவர்களுக்கும், இளைஞர்களுக்கும், பொதுமக்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொண்டது.

தமிழகத்தின் எல்லாப் பள்ளி மாணவர்களும் திருக்குறளைக் கற்க வேண்டும் என்று தீர்ப்பு வழங்கிய மாண்புமிகு நீதியரசர் ஆர்.மகாதேவன் அவர்களுக்கு பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும், தெரிவித்துக்கொண்டது. மதுப்பழக்கத்தால் பாதிக்கப்படும் குடும்பங்களைக் காப்பாற்றும் பொருட்டு தமிழ் நாட்டில் பூரண மதுவிலக்கை நடைமுறைப் படுத்துமாறு தமிழக அரசைக் கேட்டுக்கொண்டது.

தமிழ்நாடு அரசு பள்ளிக்கல்வித்துறை நடத்திவரும் இடைநிலைக்கல்வி பொதுத்தேர்வு தமிழ்ப்பாடம் அறநூல் பகுதியில் உள்ள திருக்குறள் 4-அதிகாரத்திலும் வினாக்கள் கேட்கப்படுவதில்லை, ஒரு மதிப்பெண் வினாவில் கூட திருக்குறள் புறக்கணிக்கப்படுகிறது. இதனால் சில பள்ளிகளில் திருக்குறள் பாடம் கற்பிக்கப்படுவதில்லை. தமிழ்நாடு அரசு இதில் கவனம் செலுத்தி ஆவன செய்திடுமாறு கேட்டுக்கொண்டது.

உலகத் திருக்குறள் பேரவை, திருப்பூர் மாநகரக்கிளை சார்பாக அளிக்கப்பட்ட தீர்மானங்களை அந்தக் கிளை ஏற்று நிறைவேற்றும்படி ஏற்பளித்தது.

பின்னர் பொதுச் செயலாளர் புலவர் தி.சு. மலையப்பன் அவர்கள் கருத்துரை ஆற்றினார். தலைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் ஆகியோர் கருத்துரையாற்றினர். நன்றியுரைக்குப்பின் நாட்டு வாழ்த்துடன் கூட்டம் இனிதே நிறைவெய்தியது.

உலகத் திருக்குறள் பேரவை மாவட்ட கிளைகளின் தலைவர், செயலாளர், பொருளாளர், ஆகியவர்கள் அலுவல்வழியில் மாநிலச் செயற்குழு உறுப்பினர்களாக அமைவர் என்று விதிதிருத்தம் செய்யத் தீர்மானிக்கப்பட்டது.





குன்றக்குடி

## அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்

# தைப்பூசப்பெருந்திருவிழா

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் தைப்பூசப் பெருந்திருவிழா 31-1-2017 முதல் 9-2-2017வரை 10 நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. 31-1-207 காலை 5.30 மணிக்கு கொடியேற்றம் நிகழ்ந்தது. முதல் திருநாள் முதல் ஐந்தாம் திருநாள் வரை இரவு 8.00 மணியளவில் வெள்ளிக் கேடகத்தில் அருள்தரு சண்முகநாதன் திருவீதி எழுந்தருளி அருள்காட்சி நல்கினார், ஆறாம் திருநாள் 5-2-2017 இரவு 8.00 மணியளவில் தங்கரதத்தில் திருவீதி எழுந்தருளி அருள்காட்சி தந்தார். ஏழாந்திருநாள், எட்டாம் திருநாள் வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருளி திருக்காட்சி அருளினார். ஒன்பதாம் திருநாள் மாலை 4.30 மணியளவில் தேரோட்டம் நடைபெற்றது. ஏராளமான பக்தப் பெருமக்கள் திருத்தேர் வடம்பிடித்து அருள்தரு சண்முகநாதப் பெருமானின் திருவருள் பெற்றார்கள். இரவு 8.00 மணியளவில் வெள்ளிக் கேடகத்தில் எழுந்தருளி திருவீதி உலாவந்தார். பத்தாம் திருநாள் காலை 11-15 மணியளவில் வெள்ளிக் கேடகத்தல் சுவாமி எழுந்தருளி மயூரகிரி புஷ்கரணியில் தீர்த்தவாரி நடைபெற்றது. பகல் 1-30 மணியளவில் தேனாற்று தீர்த்தவாரியும், பழனியாயி ஊரணி மண்டகப்படியும் நடைபெற்றது. மாலை 6.00 மணியளவில் தீபாராதனை நடைபெற்று மலைக்கோயிலுக்குச் சென்று சேர்க்கையானார்.

எல்லாத் திருநாள்களிலும் நாதஸ்வர இன்னிசையும் வேத பாராயணமும் திருமுறை பாராயணமும் நடைபெற்றன. மெய்யன்பர்கள் ஆயிரக்கணக்கானோர் இவ்விழாவில் கலந்து கொண்டு பெருமானை வழிபட்டு திருவருள் பெற்று மகிழ்ந்தனர்.

### தொழிலதிபர், வள்ளல்

# வீ.கே.என். காலமானார்



திருச்சிராப்பள்ளி தொழிலதிபர் வள்ளல் திரு.வீ.கே.என். அவர்கள் 12.2.2017 அன்று காலமானார் என்ற செய்தியறிந்து "மக்கள் சிந்தனை" வருந்துகின்றது. தாம் தொழிலால் ஈட்டிய செல்வத்தைச் சமயப்பணிக்கும் தமிழ்ப்பணிக்கும் சமூகப்பணிக்கும் வாரிவழங்கிய வள்ளல் இவர். நம் குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் மகாகுருபூசை விழாவில் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்களால் "தமிழவேள்" பட்டம் பெற்ற பெருமைக்குரியவர். இவர்தம் மறைவு ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கு "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலையும் ஆறுதலையும் தெரிவித்துக்கொள்வதோடு அவர்தம் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெற இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

### பிரான்மலையின் இலக்கிய மரபு கிராமிய நிகழ்ச்சி

சிங்கம்புணரி அருகே பிரான்மலையில் பறம்புமலையின் இலக்கிய மரபு குறித்த கிராமிய நிகழ்ச்சி சனிக்கிழமை நடைபெற்றது. நிகழ்ச்சியில் சிறப்பு விருந்தினராக தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் மனிதர்கள் மரங்களை நேசிக்க வேண்டும், வனங்களை அழிக்கக்கூடாது எனவும், பிரான்மலையில் பாரி விழாவை மீண்டும் நடத்த முயற்சிக்கப்படும் எனவும் பேசினார். நிகழ்ச்சியில் பேனா மனோகரன், சட்டப்பேரவை முன்னாள் உறுப்பினர் அருணகிரி, பேராசிரியர் அய்க்கண் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

## உலகத் திருக்குறள் பேரவை, திருப்பூர் மாநகரம் மார்ச் மாத மகளிர் தின சிறப்பு நிகழ்வு

## மகளிர் தின கருத்தரங்கம்

திருப்பூர், அவிநாசி வட்டம் திருமுருகன்பூண்டியில் அமைந்துள்ள திருமுருகநாதசாமி, திருமடத்தில் உலகத்திருக்குறள் பேரவையின் திருப்பூர் மாநகர கிளையின் மார்ச் மாத சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்றது. உலகத்திருக்குறள் பேரவையின் துணைத்தலைவர் திரு.மு.இராமசாமி வரவேற்றார். மார்ச்-8 உலக மகளிர் தினத்தை முன்னிட்டு அனைத்து நிகழ்ச்சிகளும் மகளிர் சார்ந்ததாகவே அமைந்திருந்தது.

திருமதி. அங்கம்மாள் சென்னியப்பன், திருமதி. பாலாமணி சுந்தரராசன், திருமதி. ருக்குமணி இராமசாமி, திருமதி. தனம் நாகேசுரன், திருமதி. பாக்கியம் கார்த்திகேயன், திருமதி. செண்பகவள்ளி மோகனராசு, திருமதி. ராணி மாரிமுத்து, திருமதி. கோமதி திருமூர்த்தி ஆகியோர் குத்துவிளக்கேற்றி விழாவினை துவக்கி வைத்தனர்.

செயலாளர் திரு.மு. நாகேசுவரன் அறிக்கை வாசித்தார். மக்கள் மாமன்ற செய்திமடல் வெளியிட்டு அதன் நிறுவனத்தலைவர் முனைவர். சி.சுப்பிரமணியம் திருப்பூரின் இலக்கிய அரங்கில் திருக்குறள் பேரவையின் பங்களிப்பு குறித்து எடுத்துரைத்தார்.

பேரவையின் தலைவர் திரு. சுந்தரராச அடிகளார் தமது உரையில் திருமுருகன்பூண்டி திருமுருகநாதசாமி திருமடத்தில் செய்துவரும் தமிழ்ப்பணிகளையும், ஏழை எளிய மாணவ, மாணிகளுக்கு கல்வி வளர்ச்சிக்கு செய்து வரும் பணிகளைக் குறிப்பிட்டார். மேலும் தமிழர்களின் விழிப்புணர்வு சமீபத்தில் நெடுவாசல் கிராமத்தில் ஹைட்ரோ கார்பன் எரிவாயுவிற்காக ஏற்பட்டது வரவேற்கத்தகுந்தது எனக் குறிப்பிட்டார்.

செல்வன்.கௌதம்ராஜ் திருக்குறள் குறித்து எளிய கதையின் மூலம் விளக்கினார். கவிஞர்.திரு.ஆலம் குறளினை இசைவடிவில் வழங்கினார்.

நிகழ்ச்சியில் கவிஞர்.சு. சென்னியப்பன், சமூக ஆர்வலர் திரு.நடராஜ், பத்திரிகையாளர் திரு. முத்தரசன், ஆசிரியர் திரு. கனகராஜ் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

திருப்பூர் ஜெய்சாரதா பள்ளியில் 11ஆம் வகுப்பு படிக்கும் செல்வி.நிவேதா தனது ஓவியத்திறமையின் மூலமாக திருவள்ளுவரின் ஓவியத்திலேயே 1330 திருக்குறளும் எழுதி சாதனை படைத்துள்ளார். இந்த அரிய திறமையைப் பாராட்டி கௌரவிக்கப்பட்டார்.

வெள்ளகோயில் அருகில் சொரியங்கிணத்துப் பாளையம் எனும் பகுதியில் சர்வாலயம் என்ற பெயரில் அறக்கட்டளை அமைத்து அங்கு ஆதரவற்றோர் இல்லம் குறிப்பாக மூத்த குடிமக்களுக்கு இல்லம் அமைத்து சமூகத் தொண்டாற்றி வருகின்றனர். அந்த அறக்கட்டளையின் தலைவர் திருமதி. கலா கனகசபை அவர்களுக்கு "மனிதநேய மங்கையர் திலகம்" என்கிற விருது வழங்கி கௌரவிக்கப்பட்டார். இந்த விருதினை வழங்கிச் சிறப்பித்தவர் ஒரிஸா மாநிலத்தில் புவனேஸ்வர் தமிழ்ச்சங்கத்தின் தலைவர் திரு.துரைசாமி ஆவார்.

சிறப்பு அழைப்பாளராக கொச்சின் தமிழ்ச்சங்கத்தின் செயலாளர் திரு. லட்சுமணன் பங்கேற்று மகளிர் பெருமைகளை விளக்கும் வகையில் சிறப்புரை நிகழ்த்தினார்.

தொடர்ந்து மார்ச்-8 சர்வதேச மகளிர் தினத்தை முன்னிட்டு மகளிர்தினக் கருத்தரங்கம் நடைபெற்றது. இதில் புதுக்கோட்டை மாவட்டத்திலிருந்து உலகத் திருக்குறள் பேரவையின் அமைப்பாளர் திருமதி. சந்திரா கருத்தரங்கத் தலைவராக இருந்து சிறப்பாக நடத்தினார். ஈரோடு சிக்கய்ய நாயக்கர் கல்லூரி பேராசிரியர் திருமதி. இராக்கு தனது கருத்துரையில் பெண்ணியம் போற்றும் எத்தனையோ இலக்கிய படைப்புகள் இருந்துள்ளன. இருந்தும் சமூகத்தில் பல இடங்களில் அவர்களுக்கான பாதுகாப்பு என்பது கேள்விக்குறியாக உள்ளது என்றார். பெண்களின் பெருமையை வலியுறுத்தித் தந்துள்ளார். வள்ளுவப் பெருந்தகை "வள்ளுவரின் வழிகாட்டுதல்படி வாழ எல்லாம் சிறப்பாக அமையும்" எனக் குறிப்பிட்டார். பெண்களுக்கான சுதந்திரம் என்பது கொடுக்கப்படுவது அல்ல. உணரப்படுவது என்றும் குறிப்பிட்டார்.

காங்கயம் ஆசிரியர் திருமதி. சந்திரா கனகராஜ் தனது கருத்தரங்க உரையில் பெண் உரிமை என்பது பேச்சிலும் எழுத்திலும் இருந்தால் மட்டும் போதாது. செயலிலும் இருக்க வேண்டும் என்றார். மேலும் பெண்கள் நிலை சமுதாயத்தில் உணரப்பட வேண்டுமானால் அவர்களின் கல்வி ஒன்றே முக்கியமாக கவனத்தில் கொள்ள

வேண்டும். கல்வி வழங்கினால் அதன் மூலம் முறையான சம்பாத்தியம், பிறகு சமூக பாதுகாப்பு அனைத்தும் கிடைக்கும் என்றார்.

திருப்பூர் சிக்கண்ணா கல்லூரி பேராசிரியர் திருமதி. சசிகலா முத்தரசன் தனது கருத்தரங்க உரையில் பெண்ணியம் போற்றும் இலக்கியங்கள் ஏட்டளவில் மட்டுமே உள்ளன. இன்றைய சமூகச் சூழலில் பெண் என்பதற்காக அவர்கள் படும் அவலங்கள் மற்றும் சமூக பாதுகாப்பின்மை குறித்தும் எடுத்துரைத்தார்.

தொடர்ந்து உலகத் திருக்குறள் பேரவையின் மாணவர் அணி பொறுப்பாளர் திருக்குறள் செல்வி. ஓவியா தனது கருத்துரையில் குறளினை இசைவழியாகவும் ஆழமான கருத்துகளாலும் விளக்கி இலக்கியத்தில் பெண்களின் நிலை, இன்றைய சாதனை பெண்கள் குறித்தும் விளக்கினார்.

உலகத் திருக்குறள் பேரவையின் பொருளாளர் திரு. எஸ்.ஏ. முத்துபாரதி நன்றியுரை நவில விழா இனிதே நிறைவுபெற்றது. செய்தி : மு.நாகேசுவரன் – செயலாளர்

---

## மக்கள் சிந்தனை

### உரிமை – பதிப்பு அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| 1. | இதழின் பெயர் | : | மக்கள் சிந்தனை |
| 2. | மொழி | : | தமிழ் |
| 3. | வெளியீடு | : | திங்கள் இதழ் |
| 4. | வெளியீடு இடம் | : | குன்றக்குடி – 630 206 |
| 5. | ஆசிரியர் | : | மரு. பரமகுரு |
| | உரிமை | : | திருவண்ணாமலை ஆதீனம்,குன்றக்குடி |
| 6. | பதிப்பாளர் | : | பழ. பாண்டித்துரை |
| | அச்சகம் | : | சண்முகநாதன் அச்சகம், மேலரதவீதி, குன்றக்குடி. |
| 7. | பதிவு | : | செய்தி இதழ் |

*மேற்கண்ட விவரம் யாவும் உண்மை என்றும், நம்பத் தகுந்தவை என்றும் உறுதி கூறுகிறேன்.*

நாள் : 1.4.2015 மரு. பரமகுரு

உ





குன்றக்குடி

# அருள்தரு சண்முகநாதப்பெருமான் திருக்கோயில்

## பங்குனி உத்திரப் பெருந்திருவிழா

திருவள்ளுவராண்டு 2048 பங்குனி 18 முதல் 27 வரை)

**31.3.2017 முதல் 9.4.2017 வரை**

முக்கிய நிகழ்ச்சிகள்

| துர்முகி | ஆங்கிலத் தேதி | திரு நாள் | வாகனம் சிறப்பு வகை |
|---|---|---|---|
| பங்குனி 18 | 31.3.2017 வெள்ளி | 1 | கொடியேற்றம் |
| பங்குனி 19 | 01.4.2017 சனி | 2 | வெள்ளிக்கேடகம் |
| பங்குனி 20 | 02.04.2017 ஞாயிறு | 3 | வெள்ளிக்கேடகம் |
| பங்குனி 21 | 03.04.2017 திங்கள் | 4 | வெள்ளிக்கேடகம் |
| பங்குனி 22 | 04.04.2017 செவ்வாய் | 5 | அருள்மிகு வள்ளிநாயகி திருமணம். பூப்பல்லக்கு |
| பங்குனி 23 | 05.04.2017 புதன் | 6 | ருத்ராட்சக் கேடகம் |
| பங்குனி 24 | 06.04.2017 வியாழன் | 7 | தங்கரதம் |
| பங்குனி 25 | 07.04.2017 வெள்ளி | 8 | தெப்பம், வெள்ளிரதம் |
| பங்குனி 26 | 08.04.2017 சனி | 9 | திருத்தேர் |
| பங்குனி 27 | 09.04.2017 ஞாயிறு | 10 | உத்திரம், தீர்த்தவிழா |

*10ஆம் திருநாள் அக்கினிக் காவடி, பறவைக் காவடி முதலியவை பார்க்கத்தக்கவை.*

குன்றக்குடி வருக! குமரன் அருள்பெறுக!

## நயம்பாடி, உலகத் திருக்குறள் பேரவையின்

# ஐம்பெரும் விழா

விழுப்புரம் மாவட்டம் செஞ்சிவட்டம் நயம்பாடி உலகத் திருக்குறள் பேரவையின் திருவள்ளுவர் விழா, பொங்கல் விழா, நூல் வெளியீட்டு விழா, பாராட்டுவிழா, பரிசளிப்பு விழா ஆகிய 37 ஆம் ஆண்டு ஐம்பெரும் விழா தி.ஆ. 2017 தை முதல் நாள் (14.1.2017) சிறப்பாக நடைபெற்றது.

இவ்விழாவில் திரு.கி.கோ. சடகோபன் தலைமை வகித்தார். மேதகு நீதிபதி திரு.பா. ஜெயபாலன் திருவள்ளுவர் படத்தைத் திறந்து வைத்தார். திருமிகு. ஸ்ரீ லெட்சுமி சேன பட்டாரக பட்டாச்சாரியவரிய சுவாமிகள் அருளுரையாற்றினார். சட்டமன்ற உறுப்பினர் திரு.கே.எஸ். மஸ்தான் சிறப்புரையாற்றினார். முன்னாள் மத்திய நிதித்துறை இணையமைச்சர் திரு. செஞ்சி. ந. இராமச்சந்திரன் விழாப் பேருரை நிகழ்த்தினார்.

அடுத்து நூல் வெளியீட்டு விழா தொடங்கியது. முனைவர் நயம்பு. அறிவுடைநம்பி எழுதியுள்ள "திருக்குறள் அல்லது மணற்கேணி" என்னும் நூலை, ஸ்ரீ லட்சுமி சேன பட்டாரக பட்டாச்சாரியவரிய சுவாமிகள் வெளியிட்டார். டாக்டர் கோ. அண்ணாமலை, திரு.வி.பி.என். கோபிநாத் ஆகியோர் நூலைப் பெற்றுக் கொண்டனர். புலவர்செ. வாசுகி நூல் திறனாய்வுரையாற்றினார்.

தொடர்ந்து விருதளித்துப் பாராட்டுவிழா நடைபெற்றது. திருக்குறள் திரு.கரு. பேச்சிமுத்து, திருக்குறள் திரு. ம. சக்கரவர்த்தி ஆகிய இருவருக்கும் "திருக்குறள் பணிச் செம்மல்" என்னும் விருதும் திருக்குறள் திரு.மு. வெங்கடேசனுக்கு "கல்விப் பணிச் செம்மல்" விருதும் வழங்கப்பெற்றன. இந்த விழாக்களில் பெருமக்கள் பலர் முன்னிலை உரையாற்றினர்.

11.1.17 திருக்குறள் போட்டிகள், 12.1.17 திருப்பாவை, ஆத்திசூடி ஒப்பித்தல், 13.1.17 விளையாட்டுப் போட்டிகள் நிகழ்ந்தன. 14.1.17 காலை 10 மணியளவில் திருக்குறள் முற்றோதலும் மாலை 4 மணியளவில் திருவள்ளுவர் திருத்தேர் ஊர்வலமும் மாலையில் நிறைவு விழாவும் பரிசளிப்பு விழாவும் நடைபெற்றது. போட்டிகளில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பெற்றன. திருமதி. குமாரி அறிவுடைநம்பி பரிசளித்துச் சிறப்பித்தார்.

அறிவுடைநம்பி, குமாரி அறிவுடைநம்பி திருக்குறள் அறக்கட்டளை நிதி உதவி, டாக்டர் அ.பாவேந்தர் திருக்குறள் அறக்கட்டளை நிதி உதவி, திரு.விஜயகுமார், புலவர் செ. பாபு ஆகியோர் உதவியுடன் விழா சிறப்பாக நிறைவெய்தியது.

---

# தூத்துக்குடி உலகத் திருக்குறள் பேரவை (கிளை) நடத்திய ஆங்கிலப் புத்தாண்டு விழா! மாதாந்தரக் கருத்தரங்கம்



உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் சார்பில் ஆங்கிலப் புத்தாண்டு விழா மற்றும் மாதாந்தரக் கருத்தரங்கம் சி.எம். மேனிலைப்பள்ளி அரங்கில் மாவட்டத் தலைவர் ஆ. திருச்சிற்றம்பலம் தலைமையில் டாக்டர்.தா. இராசலிங்கம், பேராசிரியர் குமரிக்கண்ணன் முன்னிலையில் நடைபெற்றது.

பேரவையின் தலைவர் கவிஞர் ச.சவகர்லால் வரவேற்றுப் பேசினார்.

கவிஞர் இளமுருகு கடவுள் வாழ்த்துப் பாடினார்.

திருவள்ளுவர் என்று வந்தால் குடும்பத்தில் யாரைப் போற்றுவார்? கணவனையா, மனைவியையா? எனும் தலைப்பில் பட்டிமன்றம் பேராசிரியர் குருலெட்சுமியை நடுவராகக் கொண்டு நடைபெற்றது.

"கணவனையே போற்றுவார்" என்று பேரவை மாவட்டச் செயலாளர் மோ. அன்பழகன், ஆசிரியர்கள் மனோசேவியர், பாலகுருசாமி "மனைவியையே" என்று ஏ.சி.பி. மகாலெட்சுமி கல்லூரி தமிழ்த்துறை பேராசிரியர் சுப்புலெட்சுமி, ஆசிரியர் சுந்தரி, கனகலெட்சுமி ஆகியோர் உரையாற்றினார்கள்.

இந்நிகழ்ச்சியில் அறிவுச் செல்வம், முருகேசன், தனபால், தாழை மணி, செந்தில்முருகன், ஆறுமுகம், சண்முகப்பிரியா மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

ஆசிரியர் தேவிகா நன்றி கூறினார்.




குன்றக்குடி மகளிர் கல்வியியல் கல்லூரி பட்டமளிப்பு விழா

BOOK POST
Book pocket containing printed matter
MAKKAL CHINTHANAI-Jan-March 2017
Price Rs. 8-00
Date of Publication 23-03-2017



பெறுநர்
திரு
திருவருள்திரு சுவாமிகள் அவர்கள்,
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்,
மானகிரி-(அஞ்சல்),
காரைக்குடி-(வழி).




அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166